# தீபம் யுகம்

வல்லிக்கண்ணன்

ஞானியாரடிகள் தமிழ் மன்றம்
7, நாகமணி தெரு,
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை - 600 002.

முதற் பதிப்பு டிசம்பர் 1999

பதிப்பாசிரியர்
அ.நா.பாலகிருஷ்ணன்
சென்னை - 600 002



விலை ரூ. 30

மொத்த விற்பனையாளர்: விஜயா பதிப்பகம்
20, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641001,
போன்: 394614.

ஒளி அச்சு: நம் பிராசஸ், சென்னை-18, போன்: 433 18 08.

ஒருங்கிணைப்பு: ராஜ் எண்டர்பிரைசஸ்

# முன்னுரை



சாதனை படைத்த சிறு பத்திரிகைக ளின் வரலாறு எழுதப்பட வேண்டியது அவசியம்.

இந்த வகையில், இலக்கிய உலகில் தனிச்சிறப்புடன் விளங்கிய மணிக் கொடி, சரஸ்வதி ஆகிய இதழ்களின் வர லாறுகளை எழுதச்செய்து 'தீபம்' இலக்கிய இதழில் பிரசுரித்தார் நா.பா.

கால ஓட்டத்தில் 'தீபம்' இதழே வரலாறு ஆகிவிட்டது. தமிழ் இலக்கியத்தில் சாதனைகள் புரிந்துள்ள நா.பா.வும் அமரரானார்.

'தீபம்' இலக்கியக் குடும்பத்தைச் சேர்ந்த இலக்கிய நண்பர், ஞானியார் அடிகள் மன்றம் பாலகிருஷ்ணன் நா.பா.விடம் மிகுந்த அன்பும் நட்பு உணர்வும், தீபத்திடம் ஆழ்ந்த ஈடுபாடும் கொண்டவர். அவர் சிரமங்களை பொருட்படுத்தாது, சொந்தப் பொறுப்பில் ஆண் டுதோறும், நா.பா.வுக்கு அஞ்சலி நடத்தி வருகிறார்.

வருடம் தோறும் இப்படி ஒரு நாள் கூடி நா.பா.வை நினைவு கூர்ந்து ஆத்மார்த்தமாகப் பேசிச் செல்வதோடு நின்று விடாமல் நா.பா.வின் நினைவை அழுத்தமாகப் பதிவு செய்யும் நினைவு நூல் ஒன்றை தொகுத்து வெளியிட வேண்டும் என்று பாலகிருஷ்ணன் விரும்பினார்.

நண்பர்கள் நா.பா.பற்றி நினைவு கூர்ந்து, அவரவர் அனுபவங்க ளைக் கூறும் தொகுப்பு நூலை விட, நா.பா.ஒரு தவமாக -

வேள்வியாக நடத்திய, தமிழ் இலக்கிய உலகில் தனக்கென ஒரு தனியிடம் பெற்றுள்ள தீபம் பத்திரிகையின் வரலாற்றை எழுதி அச்சி டுவதே நா.பா.வுக்கும் தீபத்துக்கும் உரிய நினைவுச் சின்னமாக அமையும் என்று தி.க.சிவசங்கரன் நண்பருக்கு யோசனை சொன் னார். அத்துடன் தீபம் வரலாற்றை எழுத வல்லிக்கண்ணனே ஏற்றவர் எனறும், இவ்வரலாற்றுக்கு 'தீபம் யுகம்' என்று பெயர் வைப்பது பொருத்தமாக இருக்கும் என்றும் தி.க.சி. தெரிவித்துள்ளார்.

அந்த யோசனையை மகிழ்ச்சியுடன ஏற்றுக் கொண்ட நண்பர் பாலகிருஷ்ணன் தீபம் வரலாற்றை எழுதும் பொறுப்பை எனக்கு அளித்தார்.

என்னிடம் சகோதர அன்பும், மிகுந்த நட்பு உணர்வும் கொண்டி ருந்தவர் நா.பா. என் இஷ்டம் போல் சுதந்திரமாக எழுதுவதற்கு தீபத்தின் பக்கங்களை தாராளமாக ஒதுக்கிவைத்தார் அவர். அவரு டைய தூண்டுதலும், தீபத்தின் துணையும் இல்லாதிருந்தால், சரஸ்வதி காலம், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, தமிழில் சிறு பத்திரிகைகள் ஆகியவற்றை நான் எழுதியிருக்க மாட்டேன். இவை எனக்கு மிகுந்த கவனிப்பைப் பெற்றுத் தந்தன. இவற்றால் தீபமும் சிறப்பு அடைந்தது.

நான் நன்றியுடன் இதை பல்வேறு சமயங்களில் பல இடங்களில் கூறி வந்திருக்கிறேன். நா.பா.வுக்கும் தீபத்துக்கும் என் நன்றியை நன்கு வெளிப்படுத்த வரலாறு எழுதும் வாய்ப்பு எனக்குப் பெரிதும் உதவியுள்ளது. இந்த வாய்ப்பை எனக்கு அளித்த பாலகிருஷ்ணனுக் கும், யோசனை கூறிய தி.க.சி.க்கும் என் அன்பு வணக்கம்.

வல்லிக்கண்ணன்

# என்னுரை

தமிழ் மொழியின் வளத்துக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் மிகுந்த அளவில் பங்களித்து வருவன சிற்றிதழ்களே ஆகும். படைப்பாளிக ளின் புதுமையான முயற்சிகளுக்கும் சோதனை ரீதியான படைப்புக ளுக்கும், மற்றும் ஆற்றல் பெற்ற புதிய படைப்பாளிகளின் வளர்ச்சிக் கும் முன்னேற்றத்துக்கும் பெரும் அளவில் துணை புரிவனவும் சிற்றி தழ்கள் தான்.

இவ்வகையில், இதழியல் வரலாற்றில் தமக்கெனத் தனி இடம் பெற்றுள்ள கலை இலக்கியச் சிற்றிதழ்கள் வரிசையில் 'தீபம்' மாத இதழும் சேர்கிறது.

'தீபம்' ஆசிரியர் நா. பார்த்தசாரதி அவர்களின் பேராற்றலும் இலட்சிய தாகமும் அயராத உழைப்பும் பத்திரிகை முயற்சியிலும் வளர்ச்சியிலும் அவருக்குத் துணையாகச் சேர்ந்து உழைத்த நண்பர் கள், எழுத்தாளர்களின் ஆர்வம் நிறைந்த ஒத்துழைப்பும் 'தீபம்' இலக்கிய உலகில் தடம் பதித்து உயர்ந்து நிற்பதை சாத்தியமாக்கின.

'தீபம்' 23 ஆண்டுகள் தான் செயலாற்றியது. ஆயினும் அதன் சாதனைகள் வரலாற்றுப் பெருமை உடையனவாகும். அதன் வரலாற் றையும் சாதனைகளையும் இச் சிறுநூல் சுட்டிக் காட்டுகிறது.

நா.பா. அவர்களிடம் பெரு மதிப்பும் பேரன்பும் உயர் நட்பும் கொண்டுள்ள 'ஞானியார் அடிகள் மன்றம்' அ.நா. பாலகிருஷ்ணன் அமரர் நா.பா.வின் நினைவை ஆண்டுதோறும் கொண்டாடி அவ ருக்கு அஞ்சலி செலுத்த ஏற்பாடு செய்து வருகிறார். அத்துடன் அமையாது, நா.பா.வின் நினைவை கால காலத்துக்கும் எடுத்துச் சொல்லும் விதத்தில் நா.பா. அவர்களுடன் நெருங்கிப் பழகிய நண் பர்களின் நினைவுகளை சேகரம் செய்து தொகுத்து நூலாக வெளியிட வேண்டும் என்ற எண்ணமும் அவருக்கு உண்டு.

அப்படி ஒரு நினைவுத் தொகுப்பை வெளியிடுவதற்கு முன்ன தாக, நா.பா.வின் பேராற்றலின் சின்னமாகத் திகழ்ந்த 'தீபம்' இதழின்

வரலாற்றை எழுத வேண்டியது முக்கியமாகும். அந்தப் பொறுப்பை வ.க.விடம் ஒப்படைக்க வேண்டும் என்று தி.க.சி. விரும்பினார். அவர் கோரிக்கையை ஏற்றுக் கொண்ட நண்பர் பாலகிருஷ்ணன் அந்தப் பொறுப்பை என்னிடம் தந்தார்.

நான் இவ் வரலாற்றை எழுதுவதற்கு திரு. பாலகிருஷ்ணன் செய்துள்ள பலவகை உதவிகளும் என்றும் என் உள்ளத்தில் நிலைத்தி ருக்கக் கூடியவை. முக்கியமாக நா.பா.வின் குடும்பத்தாரிடமிருந்து 'தீபம்' இதழ்களின் தொகுதிகளை ஆண்டு வாரியாக, அநேக தடவை களில் பெற்று வந்து தந்ததும், பின்னர் பொறுப்புடன் அவற்றை அவர்களிடம் கொண்டு சேர்த்ததும் குறிப்பிடத்தக்கதாகும். எனது ஆய்வுக்குத் துணை செய்யும் வகையில் 'தீபம்' தொகுதிகளை அன்பு டன் கொடுத்து உதவிய நா.பா. குடும்பத்தினருக்கு என் நன்றி உரி யது.

'மணிக்கொடி காலம்', 'சரஸ்வதி காலம்' என்று தடம் பதித்த இதழ்களின் வரலாற்றை எழுதுவதற்குக் களம் அமைத்துக் கொடுத்த 'தீபம்' இதழின் வரலாறும் சாதனைகளும் 'தீபம் யுகம்' என்ற பெய ரில் வெளிவருகிறது. என் அன்புச் சகோதரர் தி.க. சிவசங்கரன் தான் பொருத்தமான இப்பெயரையம் தேர்ந்து சொன்னார். அவருக்கும் என் இதயப்பூர்வ நன்றி.

'தீபம்' இதழில் சரஸ்வதி காலம், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், தமிழில் சிறு பத்திரிகைகள் ஆகிய இலக்கியத் தொடர் களை எழுதுவதற்கு அமரர் நா.பா. அவர்களின் அன்பும் நட்பும் எனக்கு உந்து சக்திகளாக இருந்தன. அதே அளவுக்கு, இப்போது 'தீபம்' சிறப்புகளையும் நா.பா.வின் தனிச்சிறப்புகளையும் பற்றி எழு துவதற்கு என் இனிய நண்பர் அ.நா. பாலகிருஷ்ணன் அவர்களின் உந்துதலும் உதவியும் துணை புரிந்துள்ளன. அவருக்கு என் உள மார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது இதர ஆய்வு நூல்களைப் போலவே, 'தீபம் யுகம்' குறித்த இந்த ஆய்வும் இலக்கியவாதிகள் மற்றும் ஆய்வு மாணவர்களின் வரவேற்பையும் பாராட்டுதலையும் பெறும் என நம்புகிறேன். அவர் களுக்கும் என் நன்றி உரியது.

வல்லிக்கண்ணன்

# அணிந்துரை

## 'தீபம்' இலக்கியவாதிகளின் 'வேடந்தாங்கல்!'



தற்காலத் தமிழ் இலக்கிய வரலாற்றில் முத்திரை பதித்துள்ள இரு பெயர்கள் —

0 'தீபம்'

0 'தீபம்' நா.பா. (நா. பார்த்தசாரதி)

1965 ஏப்ரலில் தோன்றி, 1988 ஏப்ரலில் மறைந்த 'தீபம்' மாத இதழ், தமிழ்ப் படைப்பு உலகில் ஒரு ஒளிமயமான யுகம் தோன்றுவதற்கு முக்கிய பங்காற்றியுள்ளது.

'தீபம்' ஆசிரியர் நா.பா. அவர்கள் தமது 55 ஆம் வயதில் 13.12.1987ல் அமரர் ஆனார்.

'ஈடு செய்ய இயலாத இழப்பு' எனும் சொற்களின் முழுப் பொருளை, எண்ணற்ற தமிழ் அன்பர்களும் படைப்பாளிகளும், வாசகர்களும் அன்று அழுத்தமாக உணர்ந்தனர். இன்றும் உணர்கின்றனர்.

அமரர் நா.பா.வின் வாழ்வு, இலக்கியப் பணிகள், பன்முக ஆளுமை, பங்களிப்பு இவை குறித்து ஒரு தனி நூல் வரவேண்டும் என்பது என் விழைவு. யாரால் (இந்தக் கடுமையான நெருக்கடி மிக்க காலகட்டத்தில்) இது நிறைவேறும்? தெரியவில்லை. எனினும், இது மிக இன்றியமையாத நற்பணியாகும்.

அமரர் நா.பா.வைத் தமிழ் மக்களுக்கு அயராது நினைவூட்ட வேண்டும் எனும் நோக்குடன், 'தீபம் இலக்கியக் குடும்பத்தைச்' சேர்ந்த அ.நா. பாலகிருஷ்ணன், எஸ். திருமலை, திருப்பூர் கிருஷ்

ணன், கோவை 'விஜயா பதிப்பகம்' மு. வேலாயுதம் மற்றும் பல அன்பர்கள் ஆண்டுதோறும் சென்னையில் 'நா.பா. நினைவு நாள்' (பல்வேறு இடையூறுகளுக்கிடையே) நடத்தி வருகின்றனர். இக்கூட் டத்தில் முதிய தலைமுறைப் படைப்பாளிகளும், இளைய தலை முறை எழுத்தாளர்களும், இலக்கிய அபிமானிகளும் பங்கேற்று, 'தீபம்' ஆசிரியரின் சீரிய ஆளுமை பற்றியும், 'தீபம்' இதழின் முக்கிய சாதனைகள் பற்றியும் உரையாற்றுகின்றனர்; கட்டுரை படிக்கின்றனர். மதிப்பீடும் கருத்துப் பரிமாற்றமும் செய்கின்றனர்.

1960ஆம் ஆண்டு முதல் நா.பா.வின் இறுதிமூச்சு உள்ளவரை யில், அவருக்கும் எனக்கும் இடையிலான மிக நெருங்கிய நேயப் பிணைப்புகள் குறித்து நன்கறிந்தவர்களில், அருமை நண்பர் அ.நா. பாலகிருஷ்ணனும் ஒருவர்.

'தீபம்' நா.பா.வின் பரந்த இதயத்தில் நீங்கா இடம் பெற்றவர்க ளில் இவர் மிக முக்கியமானவர். 'தீபம்' இலக்கியக் குடும்பத்தின் 'அச்சாணி' என்றும், 'பல் சக்கரம்' என்றும் இவரை வர்ணிக்கலாம். தன்னலமற்ற தமிழ் இலக்கியத் தொண்டர்களுக்கு அ.நா.பா. ஓர் அரிய எடுத்துக்காட்டு.

சென்னையில் 'ஞானியார் அடிகள் தமிழ் மன்றம்' செயலர் இவர். அந்த அமைப்பின் சார்பில், ஆண்டுதோறும் இவர் நா.பா. நினைவு நாளை கொண்டாடுவதில் மிகுந்த ஈடுபாட்டுடன் செய லாற்றி வருகிறார். இது போற்றத்தகுந்த நற்பணி ஆகும்.

நா.பா. நினைவு நாளை கொண்டாடுவதுடன் நா.பா.வின் நினைவை நிரந்தரமாகப் பதிவு செய்யும் வகையில், நா.பா. நண்பர்க ளின் நினைவுகளைத் தொகுத்துக் கூறும் கட்டுரை நூல் ஒன்றை வெளியிட வேண்டும் என்ற அவா அவருக்குப் பல வருடங்களாக இருந்து வருகிறது. அது தொடர்பாக, 1997ல் அ.நா.பா. திருநெல்வே லியில் என்னைச் சந்தித்து, எனது நினைவுகளை கட்டுரையாக எழு தித் தரும்படி கேட்டார். அப்போது நான் அவரிடம் ஒரு புதிய யோசனையை வெளியிட்டேன்.

'நா.பா. பற்றிய கட்டுரைத் தொகுப்பு வெளியிடும் உங்கள் முயற்சியை வரவேற்கிறேன். ஆனால் அதை விட உருப்படியான

ஒரு காரியம் செய்ய வேண்டியது மிக அவசியம். மணிக்கொடி காலம், சரஸ்வதி காலம் நூல்களைப் போல, தீபம் யுகம் எனும் நூலை நீங்கள் வெளியிட வேண்டும். அதை எழுதுவதற்கு எல்லா வகையி லும் மிகப் பொருத்தமானவர் வல்லிக்கண்ணன்தான். இந்நூலை இயற்றும் பணியை உடனே அவரிடம் ஒப்படையுங்கள். தமிழுக்கு ஓர் அற்புதமான வரலாற்றுப் பெட்டகம் கிடைக்கும்' என்று சொன் னேன்.

என் யோசனையை மனம் உவந்து ஏற்ற அ.நா.பா. அவர்களை யும், அவரது வேண்டுகோளை விரைவில் நிறைவேற்றிய என் பெரு மதிப்புக்குரிய பேராசான் வ.க. அவர்களையும் உலகெங்கணும் உள்ள தமிழ் அன்பர்கள் உளமாரப் பாராட்டுவர் என்பது உறுதி.

ஒரு இலக்கிய ஆய்வு மாணவனின் அக்கறையோடும் ஈடுபாட் டுடனும் 'தீபம்' இதழ்களைப் பரிசீலித்து இந்த இலக்கிய வரலாற்று ஆவணத்தை எழுதியுள்ள முதுபெரும் எழுத்தாளர் வ.க. அவர்களை யும், எத்தனையோ நெருக்கடிகளைச் சமாளித்து, அரிதின் முயன்று நூலை, வெளிக் கொண்டுவரும் கர்ம வீரர் அ.நா.பா. அவர்களை யும், இவர்களுக்கு உறுதுணையாக விளங்கிய இதர அன்பர்களையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

1965 முதல் 1988 வரை இலக்கியவாதிகளின் 'வேடந்தாங்கல்' ஆக விளங்கியது 'தீபம்'. அங்கு முட்டையிட்டுக் குஞ்சு பொறித்த - தங்க இளைப்பாறி, ஊக்கமும் உத்வேகமும் பெற்ற 'பறவைகள்' எத்தனையோ.

தமிழ் இலக்கிய வரலாற்றில், பாரதி பாதையில், 'மணிக்கொடி' மரபில் நவயுக இலக்கியம் வளர வழி அமைத்த 'தீபம்' இதழும், அதன் ஆசிரியர் நா.பா.வும் தமிழ் நெஞ்சங்களில் என்றென்றும் சுடர் விட்டு ஒளிர்வது திண்ணம்.

தி.க. சிவசங்கரன் (தி.க.சி)
திருநெல்வேலி-6, 15.3.1998

# பதிப்புரை

தமிழ் மொழியின் மீதும், தமிழிலக்கியங்கள் மீதும் எனக்கு - மாணவப் பருவத்திலிருந்தே வேட்கை அதிகம். நல்லவைகளைத் தேடித் தேடிப் படிக்கும் பழக்கம் அப்போது முதலே எனக்கு உண்டு. 'சிறந்த வாசகன் நான்' என்ற பெருமையும் பெருமிதமும் எனக்கு எப்போதுமே உண்டு.

'கல்கி' வார இதழில் திரு. நா.பார்த்தசாரதி அவர்களது 'பொன் விலங்கு' என்ற தொடர்கதையைப் படித்தபோது ''இவ்வளவு சிறப் பாக எழுதும் இந்த நாவலாசிரியரை எப்படியும் நேரில் சந்தித்து உரையாடவேண்டும்'' என்று ஆசைப்பட்டேன். அவருக்கு ஒரு கடித மும் எழுதினேன். அவரிடமிருந்து பதில் வந்த பிறகு - அவரைக் கல்கி அலுவலகத்தில் சந்தித்தேன். அந்த முதல் சந்திப்பு - ஏறத்தாழ கால் நூற்றாண்டுக்காலம் அவரோடு நெருங்கிப்பழகவும் - அவரது மதிப்புக்கும் நம்பிக்கைக்கும் உரிய உயிர் நண்பனாக இருக்கவுமான வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்ததாக அமைந்தது.

1965-ஆம் வருடம் ஏப்ரல் 14-ந்தேதி நா.பா. 'தீபம்' மாத இதழைத் தொடங்கினார். அப்போது முதல் நான் 'தீபம்' இதழின் பணிகளிலும் அவ்வப்போது என்னால் முடிந்த அளவு என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். ஒவ்வொரு நாளும் அவரை வீட்டிலும் தீபம் அலுவலகத்திலும் சந்திப்பதை வாடிக்கையாக்கிக்கொண்டேன்.

அவருடைய இலக்கியப் படைப்புகள் போலவே அவரது தோழமையும் என்னுள் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியது. 13.12.87 அன்று நா.பா.வின் தமிழ்மூச்சு ஓய்ந்தது; அவரது மறைவுக்குப் பின்னர் அவரது தீபமும் அணைந்தது! ஆனால் எனது நெஞ்சிலிருந்து அவரது நினைவுகள் அகலவே இல்லை! அவரது நினைவு நாளை - ஞானியாரடிகள் தமிழ்மன்றத்தின் வாயிலாக ஆண்டுதோறும் அறிஞர் பெருமக்களை அழைத்து நடத்தி வருகிறேன்.

தீபம் பார்த்தசாரதியின் நினைவு நாளை - ஆண்டுதோறும் தவறாமல் நடத்துவதுபோலவே - அவரது செல்லக் குழந்தைகளில் ஒன்று என்பதாகவே கருதி - அவர் வளர்த்த 'தீபம்' இதழின் நினைவையும் தமிழிலக்கிய ஆர்வலர்களின் நெஞ்சங்களில் நீங்காத வகையில் நிலைநிறுத்த வேண்டும் என்று விரும்பினேன்.

'தீபம்' இதழின் தொடக்கத்திலிருந்து நா.பா.வோடு நெருங்கிப் பழகி - தீபம் வளர்ச்சியில் - நா.பா.வின் தோளோடு தோள் நின்று அக்கறையோடு பணியாற்றிய நண்பர்களிடமிருந்து நா.பா. பற்றியும் - அவரது 'தீபம்' பற்றியும் விமர்சனக் கட்டுரைகள் பெற்று - அதனை ஒரு தொகுப்பு நூலாக வெளியிடும் முயற்சியில் இறங்கினேன்.

அப்போது - தமிழிலக்கிய விமர்சனக்கலையின் வழிகாட்டிக ளில் - முன்னோடிகளில் ஒருவரான திரு. தி.க.சி. அவர்களை - நெல்லையில் அவரது இல்லத்தில் சந்தித்து எனது முயற்சி பற்றி உரையாடினேன்.

''கட்டுரைத் தொகுப்பு நூல் வெளியிடுவதைவிட 'தீபம்' முதல் இதழிலிருந்து - கடைசி இதழ் வரையில் தீபமும் - அதன் மூலம் அதன் ஆசிரியர் நா.பா.வும் ஆற்றிய இலக்கியப்பணிகளை 'தீபம் யுகம்' என்ற தலைப்பில் விமர்சித்து எழுதினால் அது தமிழ் உள்ள வரையில் நா.பா.வையும் அவரது தீபத்தையும் நினைவுபடுத்திக் கொண்டே இருப்பதாக அமையும்'' என்றார் தி.க.சி.

அந்த நூலைத் திறம்பட எழுதக்கூடியவர் யார் என்பதையும் அவரே பரிந்துரை செய்தார்.

'மணிக்கொடிகாலம்' போல சரஸ்வதி காலத்தையும் அற்புத மாக எழுதிய வல்லிக்கண்ணன் அவர்களைக் கொண்டே 'தீபம்யுகம்' பற்றிய ஆய்வுநூலையும் எழுத வேண்டும் என்பதே அவரது விருப் பம்! திரு. வல்லிக்கண்ணன் அவர்களை சந்தித்து - இதனைத் தெரி வித்தபோது அவரும் மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார்.

நா.பா. அவர்களது இல்லம் சென்று அவரது துணைவியார் திருமதி சுந்தரவல்லி பார்த்தசாரதியிடமும் அவரது அருமைச் செல் வங்களான மகன் - மகள்கள் ஆகியோரிடமும் இதுபற்றிப் பேசி னேன். புத்தகம் எழுதுவதற்கு உதவியாக - தீபம் முதல் இதழிலிருந்து கடைசி இதழ் வரையிலான 23 ஆண்டுகளுக்கான தொகுப்புகளை அவர்கள் மனமுவந்து எடுத்துக்கொடுத்தார்கள் அவர்கள். 'தீபம் யுகம்' வெளிவர - மிகப்பெரிய உதவியாக இருந்தது அவர்களது ஆதரவும் - நல்வாழ்த்துக்களும்தான்.

இந்த சந்தர்ப்பத்தில் தீபம் தொடக்க நாள் முதல் - நா.பா.வின் மறைவுக்குப்பிறகும் சில இதழ்கள் வெளிவர உழைத்த அவரது உற வினர் திரு. சு.திருமலை, தீபம் தொடக்க இதழ் முதல் கடைசி இதழ்

வரையில் அதன் அச்சுப் கோப்பாளராகப் பணியாற்றி அண்மையில் மறைந்த திரு. ராஜதுரை, தீபம் இதழில் கடைசிப் பத்தாண்டுகள் முழுவதும் தீபம் அலுவலகத்திலேயே தங்கி, தீபம் வளர்ச்சிக்கு உதவிய திரு. திருப்பூர் கிருஷ்ணன், 'தீபம் யுகம்' புத்தகம் வெளிவர என்னோடு ஒத்துழைத்த திரு. இரா. தியாகராஜசன், (சின்னக்குத்தூசி), புத்தகத்தை அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுக்கும் பணியை ஏற்றுக்கொண்டு சிறப்புற முடித்துக் கொடுத்த திரு. ஆர்.ராஜசேகரன் ஆகியோருக்கு எனது உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

நா.பா. மூலம் எனக்கு கிடைத்த மிகச் சிறந்த நண்பர்களில் ஒருவராகிய கோவை. மு.வேலாயுதம் அவர்கள் தமது விஜயா பதிப்பகத்தின் மூலம் இந்தப் புத்தகத்தின் விற்பனைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார். அவருக்கும் - கடந்த 11 ஆண்டுகளாக தீபம் பார்த்தசாரதியின் நினைவு நாள் கூட்டங்களை நடத்திய போதெல்லாம் அந்தக் கூட்டங்களில் கலந்து கொண்டு - நா.பா.வின் இலக்கியப் பணிகள் பற்றி சிறப்புற விமர்சன உரையாற்றிய நண்பர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவிக்கக்கடமைப்பட்டுள்ளேன்.

நா.பா.வின் நினைவு போற்ற ஆண்டுதோறும் நினைவுக் கூட்டங்கள் நடைபெறுவது - தொய்வில்லாமல் தொடரும்; 'தீபம்' இதழ்களின் மூலம் நா.பா. ஆற்றிய இலக்கியத்தொண்டு என்றென்றும் தமிழ் மக்கள் நெஞ்சங்களில் நீங்காது நிலைத்திருக்கும் வகையில் - வல்லிக் கண்ணன் மிகச் சிறப்பாக 'தீபம் யுகம்' எனும் இந்த விமர்சனப் பெட்டகத்தை உருவாக்கித் தந்திருக்கிறார்.

இன்னும் ஒரு ஆசை; தமிழகத்தின் பல்கலைக்கழகங்களில் ஒன்றில் நா.பா. நினைவு நாள் அன்று ஆண்டுதோறும் நா.பா.நினைவுச் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதுதான் அது.

நா.பா.மீது அளப்பரிய அன்பும் - மதிப்பும் கொண்ட தீபம் வாசகர்கள் - தமிழ் ஆர்வலர்கள் உதவியோடு - அந்த ஏற்பாட்டையும் விரைவில் செய்து முடித்துவிட முடியும் என்று நம்புகிறேன்.

அ. நா. மாணிக்ஞன்.

மணிவண்ணன்
"கல்கி"
சென்னை-10.

அன்பிற்குரிய திரு. அ. நா. பாலகிருட்டிணன் அவர்களுக்கு வணக்கம். 6-12-64 முதல் 13-12-64 வரை நான் வெளியூர்ச் சுற்றுப் பயணத்தில் இருந்து விட்டதனால் தங்களது 10-12-64 கடிதத்தைத் திரும்பி வந்தபின்னரே காண முடிந்தது. அதனால் தயை செய்து இந்த வாரமோ, அடுத்த வாரமோ - ஒரு நாள் காலை பதினொ மணியளவில் காண வருக.

அன்புடன்,
நா. பார்த்தசாரதி.

# 1. ஒரு இலட்சியவாதியின் தவம்

இலக்கியப் பத்திரிகைகளின் வரலாறு உணர்த்துகிற உண்மைக ளில் ஒன்று -

தன்னம்பிக்கையும் இலட்சிய வேகமும் செயல்முனைப்பும், புதி தாக சாதனைகள் புரிய வேண்டும் என்ற வேட்கையும், நம்மால் அவற்றை செய்ய முடியும் எனும் மன உறுதியும், நாம் சாதிப்பதற்கா கப் பல காரியங்கள் காத்துக்கிடக்கின்றன என்ற எண்ணமும் கொண்ட இலக்கியவாதி, போதிய பணபலம் இல்லாது, பத்திரிகை தொடங்கி, பெரும் சிரமங்களுடன் நடத்தி, வைராக்கியத்துடன் அதை வளர்க்க முற்படும் போது, திறமையாளர்கள் பலரது துணை யும் ஒத்துழைப்பும் அவருக்குக் கிடைக்கின்றன. அந்தப் பத்திரிகை வெற்றிகரமாக சாதனைகள் பல புரிந்து, வரலாற்றில் தனி இடம் பெறுவதும் சாத்தியமாகிறது.

மணிக்கொடி, சரஸ்வதி, எழுத்து போன்ற இதழ்களின் வரலாறு இதை புலப்படுத்துகின்றது. இவ்வகையில் மற்றுமொரு முக்கிய சான் றாகத் திகழ்கிறது நா.பார்த்தசாரதியின் 'தீபம்'.

''எந்தப் பத்திரிகையும் இதுவரை சாதிக்காமல், இனிமேல் சாதிப்பதற்கென்றே சில துணிவான இலக்கிய முயற்சிகள் இன்னும் மீதமிருக்கின்றன. ஒரு புதிய பத்திரிகை அத்தகைய இலக்கியக் காரி யங்களைத் தொடங்கி மேற்கொள்ள இடமிருக்கிறது'' என நா.பா. உறுதியாக நம்பினார்.

''தன்மானமும் நேர்மையுமே இரு கரங்களென நம்பும் ஓர் அசல் எழுத்தாளன்'' அவர். பரிசுத்தமான எண்ணங்களுடனும், தணியாத சத்திய வேட்கையுடனும், எல்லா இடங்களிலும் அறிவின் பிரகாச மும் உண்மையின் ஒளியும் துலங்க வேண்டும் என்ற உயர்ந்த இலட்சி யத்துடனும்'' அவர் 'தீபம்' என்ற மாத இதழை ஆரம்பித்தார்.

'ஒரு புதிய பத்திரிகை தொடங்குவதிலுள்ள கஷ்டங்களையெல் லாம் நண்பர்கள் நிறைய எடுத்துச் சொன்னார்கள். இது கஷ்டம்

நிறைந்ததென்பதனாலேயே இத்தைதான் தொடங்க வேண்டுமென்ற தீரனின் ஆசை - இயல்பான ஆசை - நியாயமான ஆசை எனக்கு எழுந்தது. இதில் சிரமங்கள் நிறைய இருக்கின்றன என்பதனாலேயே இதை நான் துணிந்து மேற்கொள்ள வேண்டியவனாகிறேன். இந்த வழியில் இலட்சிய வேகமுள்ள பல நல்ல எழுத்தாளர்கள் ஏற்கெனவே தொடர்ந்து சென்று ஒருவர் பின் ஒருவராகத் தோற்றிருக்கிறார்கள் என்பதனாலேயே அவர்கள் சார்பில், அவர்களுடைய தோல்விகளுக்கெல்லாம் வட்டியாக இதில் நான் வெற்றி பெற வேண்டுமென்ற தன்னம்பிக்கை எனக்கு வந்திருக்கிறது. இந்தத் தன்னம்பிக்கை தான் என்னிடம் நான் வெற்றி பெறுவதற்காக வைத்திருக்கும் வைரம் பாய்ந்த ஆயுதம்' என்று, ஒரு பிரகடனம் போல, அவர் அறிவித்தார்.

'மேடு பள்ளம் நிறைந்த பாதை' எனத் தெரிந்தும், 'துணிந்து நடப்பதற்காக வலது காலை முன்னெடுத்து வைத்து' நா.பா. 'தீபம்' இதழை தொடங்கியது 1965 ஏப்ரல் மாதம் - சித்திரை முதல் நாளில். அப்போது அவர் தமிழ் உலகம் நன்கறிந்த நல்ல எழுத்தாளராகப் புகழ் பெற்றிருந்தார்.

மதுரையில் தமிழ்ச்சங்கத்தில் பயிற்சி பெற்றுத் தேர்ந்து, வற்றாயிருப்பு என்ற சிற்றூரில் தமிழாசிரியராகப் பணிபுரிந்த காலத்திலேயே அவர் எழுத ஆரம்பித்துவிட்டார். இலட்சியக்கதை மாந்தர்களையும், சீரிய நோக்கங்களையும், அழகான சிந்தனைச்சுடர்களையும், இனிய தமிழ் நடையையும், வளமான கற்பனையையும், வாழ்க்கையின் பிரதிபலிப்புகளையும் கொண்டிருந்த அவருடைய படைப்புகள் 'தமிழ் கூறும் நல் உலகம்' எங்கும் பரவியிருந்த தரமான வாசகர்களைக் கவர்ந்தன. 'குறிஞ்சி மலர்' 'பொன் விலங்கு' ஆகிய புனைகதைகள் நா.பா.வின் எழுத்தாற்றலை எடுத்துக்காட்டின. அவை அவருக்கு எண்ணற்ற வாசகர்களை - அபிமானிகளை - இலக்கிய நண்பர்களை பெற்றுத்தந்தன. அவருடைய நாவல்களின் கதைமாந்தர்களை அவரவர் குடும்ப அங்கத்தினர்கள் போலவும், அவர்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களை அவரவர் சொந்தக்காரர்களுக்கு எதிர்பட்ட சுகதுக்கங்கள் போலவும் எண்ணற்ற வாசகர்கள் எண்ணுகிற அளவுக்கு நா.பா.வின் எழுத்தாற்றல் ரசிகர்களின் உள்ளங்களை ஈர்த்திருந்தது. 'கல்கி' பத்திரிகையில் உதவி ஆசிரியராகப் பணிபுரிந்த காலத்தில் அவர் எழுதிய படைப்புகள் பலவும் தமிழ் வாசகர் உலகத்

தில் நா.பார்த்தசாரதி என்ற எழுத்தாளருக்கு இடம் பெற்றுத் தந்திருந் தன.

ஆகவே, தமிழன்பர்கள் தனக்குத் துணை நிற்பார்கள் என்ற நம்பிக்கையோடும், 'இந்த ஞான நெருப்பில் நானே தீக்குளித்து எழத் துணிந்திருப்பதற்காகத் தமிழ்த்தாய் நிச்சயம் என் பக்கலில் துணை நிற்பாள்' என்ற உறுதியுடனும் நா.பா. 'தீபம்' இலக்கிய இதழைத் தொடங்கினார். அவர் பணபலம் பெற்றிருக்கவில்லை. ''இந்த முயற் சிக்காக நான் சேர்த்திருக்கிற மூலதனம் வெறும் பணம் மட்டுமே யல்ல. மனோதர்மமும், தன்னம்பிக்கையுமே எனது பலமான மூலத னங்கள். ஒரு காகித வியாபாரி பத்திரிகை தொடங்கும் போது அவர் விற்கும் காகிதத்தைப் போலவே மற்றொரு வர்ணக் காகிதமாகிய பணமும் அதிகாரமுமே அதற்கு மூலதனமாகலாம். ஆனால் ஓர் எழுத்தாளன் பத்திரிகை தொடங்கும் போதோ பணத்தை விட மனோ தர்மமே பெரிய மூலதனமாக அமைய முடியும். அப்படித்தான் நானும் அமைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று நா.பா. அறிவித்தார்.

தேர்ந்த எழுத்தாற்றலும், நிறைந்த பத்திரிகை அனுபவமும் பெற் றிருந்த மூத்த எழுத்தாளர் தி.ஜ.ரங்கநாதன் (தி.ஜ.ர.) வழி காட்டும் யோசனைகள் போல், ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதில் அவர் குறிப்பிட்டிருந்த முக்கிய கருத்துகள் -

''எழுத்திலே இலக்கிய நயமும் தெளிவும் விறுவிறுப்பும் வலி மையும் அந்தரங்க சுத்தியும் வேண்டும். இதுவே முதலாவது தேவை. சில அம்சங்களில் நல்ல கவனம் எடுத்துக் கொண்டால் எழுத்தே வலுவாய்க் கொண்ட எழுத்தாளனின் பத்திரிகை வெற்றி பெறாமல் போகாது.

தன் சக்திக்கு இயன்ற நிலையில் தன் மனதுக்குச் சிறப்பாய்த் தோன்றுகிற அம்சங்களால் தன்னால் இயன்றவற்றை இட்டுப் பத்தி ரிகை நடத்துவதே நல்லது. சுய இயல்பை மாற்றிக் கொள்ள முயலா மல், யாரையும் எதையும் நகலடிக்க எண்ணாமல் தனக்குப் பிடித்த தைத் தனக்குப் பிடித்த முறையில் தயாரித்துப் பத்திரிகை நடத்தினால், யாருக்கும் நிச்சயமாகத் தோல்வி வரவே வராது.

'தைரியம் வேண்டும். சுய பலத்தைப் பூரணமாய் நம்ப வேண் டும். எப்பொருள் யார் வாய்க் கேட்பினும், எப்பொருள் எத்தன்மைத்

தாயினும், அப்பொருள் மெய்ப்பொருள் காணும் முயற்சி வேண்டும். ஆய்ந்த சுயமுடிவு வேண்டும். அதுவே திட சங்கல்பமாய் கொண்டு, சலியாமல் செயலாற்ற வேண்டும். மனச்சாட்சியே பார்த்தன். மதியே கண்ணன்.'

(பத்திரிகைத் தொழில் - ஒரு கண்ணோட்டம். - தி.ஜ.ர. 'தீபம்' 2வது இதழில்.)

இப்பண்புகளை பெற்றிருந்த நா.பா.வின் 'தீபம்' முதலாவது இதழ் நல்ல வெற்றியாகவும், நம்பிக்கை அளிக்கும் ஒளிச்சுடராகவும் திகழ்ந்தது.

முதலாவது இதழ் பெற்ற வரவேற்பும், அதனால் கிடைத்த பாராட்டுக்களும் மிகுந்த மகிழ்ச்சி அளிக்கத்தான் செய்தன. ஆயினும் நா.பா. 'கருமமே கண்ணாக உழைத்து', மிகுந்த சிரமங்களை சகித்துக் கொள்ள வேண்டியிருந்தது. அதை அவர் ஒரு நோன்பு ஆக, தவம் ஆகவே மேற்கொண்டு, தன்னையே முழுமையாகத் தன் பத்திரிகைக்காக அர்ப்பணித்துக் கொண்டார்.

''எனக்குச் சாப்பிடவும் நினைவில்லாது இப்பத்திரிகை சம்பந்தமான பல காரியங்கள் என்னைச் சூழ்ந்து விடுகின்றன. மெய் வருத்தம் பாராமல், பசி நோக்காமல், கண் துஞ்சாமல், எவ்வெவர் தீமையும் போட்டியும் பொறாமையும் பாராமல், கருமமே கண்ணாக நான் என் 'தீபத்தை' மேலும் மேலும் நன்கு பிரகாசிக்கச் செய்யும் காரியங்களைச் செய்து - விடாப்பிடியாக முயன்று கொண்டிருக்கிறேன். எனக்கு இன்றும் - இனி என்றும் - இது ஒரு நோன்பு - தவம்.

'என்னிடம் சிந்தனையையும் எழுத்தையும் தவிர அதிகமான வசதிகள் ஒன்றுமில்லை என்பதை நானே உணர்கிறேன். நான் ஒரு சாதாரண இலக்கியத் தொழிலாளி என்பதும் எனக்குப் புரிகிறது. நான் பணத்தினால் ஏழையாகவும் - மனத்தினால் குபேரனாகவும் இருப்பதாக எனக்கே தோன்றுகிறது. உடல் நலமில்லாத கணவன் கட்டிலருகே - அவன் நிச்சயம் பிழைத்துவிடுவான் - பிழைக்க வேண்டும் - என்று ஒரே நம்பிக்கையை மனத்தின் தவமாக கொண்டு வேறு விதமாக நினைப்பதைக் கூடத் தன் கற்பிற்குப் பங்கமாய் எண்ணும் ஓர் இந்துக்குடும்பத்து சகதர்மிணியைப்போல் என் முயற்சி

யின் வெற்றியை அன்றி வேறு அமங்கல நினைவை நினைக்கவும் செய்யாது வெற்றியே இலக்காகும் தியானமாக நான் இந்த இலக்கியத் தவத்தைச் செய்து கொண்டிருக்கிறேன்.'

இது நா.பா. வின் ஒளிவுமறைவற்ற ஒப்புதல் ஆகும். ('தீபம்' 2வது இதழில்.)

நா.பா. தன்னையே ஆகுதியாக்கிக் கொண்டு நடத்தத் துணிந்த இலக்கிய வேள்வியில் அவருடன் ஒத்துழைக்க ஆற்றல் நிறைந்த எழுத்தாளர் நண்பர்கள் முன்வந்தார்கள். பல வகைகளிலும் அவருக்குத் துணை புரிய அநேக ரசிக நண்பர்கள் முனைந்தார்கள். இவர்கள் அனைவரது கூட்டு முயற்சியினாலும் 'தீபம்' ஒவ்வொரு இதழும் புதுமையும் நயமும் சிறப்புகளும் கொண்ட இதழாக ஒளி வீசிக் கொண்டிருந்தது.

எனினும், இலட்சியப் பாதை என்றுமே மென்மலர்கள் பரப்பிய சொகுசு நடை பாதையாக இருந்ததில்லை. மேடு பள்ளங்கள் மலிந்த கரடுமுரடான பாதை தான் அது.

அதனாலேயே நா.பா. 'தீபம்' இரண்டாவது ஆண்டின் இதழின் இவ்வாறு எழுத நேரிட்டது -

''ஓராண்டு இலக்கிய வாழ்வை நிறைவுடனும் வெற்றியுடனும் நிகழ்த்தியபின் இப்போது இரண்டாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது தீபம். இந்த ஓராண்டு காலத்தில் சுகமாகவும் சொகுசாகவும் சோர்வு தளர்ச்சிகள் இல்லாமலும் இதழை நடத்தி விட்டோம் என்பதன்று இதன் பொருள். ஒவ்வொர் இதழையும் உருவாக்கும் போது அடைந்த துன்பங்களை அது வெளியிடப் பெற்றதும் மறக்க வசதியிருந்தது - மகிழ்ச்சியிருந்தது. அவ்வளவு தான்! தன்மானமும் சுயமரியாதையும் கொண்டு, துணிவாகத் தமிழ் மக்களை நம்பி, இதழ் தொடங்கிய பல அரிய எழுத்தாளர்களைக் கடந்த காலத்தில் சோர்ந்து கீழே விழச் செய்திருக்கிறார்கள் இங்கே. பலரால் பல இடங்களில் வெளிப்படையாகவும், சிலரால் சில இடங்களில் குறிப்பாகவும் எனக்குக் கூறப்பட்ட எடுத்துக்காட்டுச் செய்தி தான் இந்த எச்சரிக்கை. ஆயினும் நான் நம்பிக்கை இழந்து விடவில்லை. துணிவு குன்றி விடவில்லை. தளர்வு சூழப் பெற்று விடவில்லை. மலையத்தனை தைரியத்துடன் தான் இன்றும் இருக்கிறேன். நாளையும் இருப்பேன்.

தீபம் மாத இதழ் அந்தரங்க சக்தியோடு இலக்கிய சேவை செய்ய ஆசைப்படுகிறது.

தீபம் மாத இதழ் ஒரு சுதந்திர எழுத்தாளனின் தன்மான முயற்சி யாக இருக்கிறது.

தீபம் மாத இதழில் தமிழகத்தின் முன்னணி எழுத்தாளர்கள் யாவரும் சுதந்திரமாகவும் கருத்தோட்டத்திற்குத் தடையின்றியும் எழுதுகின்றனர்.''

தமிழ் மொழியின் வளத்துக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் தங்க ளால் இயன்றதை செய்ய வேண்டும் எனும் ஆர்வம் உள்ள எழுத்தா ளர்களின் படைப்புகள், கதைகள், கட்டுரைகள், கவிதைகள் என்ற வடிவங்களில் 'தீபம்' இதழ்களில் இடம் பெற்றன. சிந்தனை ஒளி கனலும் எழுத்துக்களும், புதுமையான பகுதிகளும் 'தீபம்' இதழுக்கு தரமும் கனமும் சேர்த்தன. தரமான வாசகர்கள் ஆழ்ந்த இலக்கிய முயற்சிகளை விரும்பி வரவேற்பவர்கள் குறைவாக உள்ள தமிழ்ச்சூ ழலில், 'தீபம்' போன்ற பத்திரிகை நடத்துவது எதிர் நீச்சல் போடும் சாதனையாகவே அமையும்.

இச்சூழ்நிலை ஏற்படுத்திய எண்ணங்களை நா.பா. நன்கு பதிவு செய்திருக்கிறார்.

''தமிழ் வாசகர்களில் இலக்கியத்தரமான அபிப்பிராயமுள்ள வர்களின் பலமான அணி ஒன்று உருவாகவும், இலக்கியத்தரமான எழுத்தாளர்களைப் பற்றிய அறிமுகமும் பேச்சுக்களும் பரவவும் தீபம் முழுமூச்சுடன் பாடுபட்டிருக்கிறது. இனியும் பாடுபடும்.

படிப்பதற்கு நிறையப் பயனுள்ள நல்ல அம்சங்களைத் தருகி றோம் என்று பெருமைப்படுவதைத் தான் தன் இலக்கிய சேவையின் இலக்கியமாகக் கருதுகிறது தீபம்.

பல பத்திரிகைகள் வாசகர்களைப் பயன் பெறச் செய்வதைவி டக் கவர்வதையே நோக்கமாகக் கொண்டு திடீர் திடீரென்று கீழ்த்தர மாக இறங்கி முழுவதும் சினிமா மயமாக மாறும் இந்த நாளிலும் தீபம் தன் இலட்சியங்களில் திட நம்பிக்கை குன்றி விடவில்லை. இந்தப் பத்திரிகையை இப்படி நடத்துவதற்காக நான் படும் சிரமங்களெல்

லாம் கூட மகிழ்ச்சிகளாகின்றன. சுய மரியாதையும் தன்மானமும் தொழில் நாணயமும் மிக்க, ஒரு சிறிய நிலத்தைச் சொந்தமாக உழு கின்ற நாட்டுப்புறத்து உழவனின் அசல் பெருமிதத்தைப் போன்ற பெருமிதமாக இது எங்களுக்குத் தோன்றுகிறது. இந்த இலக்கிய உழவின் போது கொழுமுனையில் வளமான மண்புரளுவதற்குப் பதில் கனமான கற்கள் மோதுவதும் உண்டு. ஆனால் அவற்றால் எங்கள் இலட்சிய தாகம் தடைப்பட்டு விடுவதில்லை.

புதுப்பத்திரிகைகள் எவ்வளவு நல்ல இலட்சியங்களோடு வந் தாலும் நிலைப்பதில்லை என்று, அப்படி நிலைக்க விடாமற் செய்வ தில் தாங்களும் கணிசமான குற்றம் புரிந்திருப்பதை மறந்தே, இங்கு பலர் பேசுகிறார்கள். பிடிவாதத்துடனும், நல்ல நோக்கத்துடனும் தோன்றிய பல சிறந்த இலக்கியப் பத்திரிகைகள் தீபத்திற்கு முன்னும் தமிழில் உண்டு. ஆனால் அவற்றைத் தமிழ் வாசகர்களும் விற்பனை யாளர்களும் அனுதாபத்துடன் உரிய காலங்களில் கவனித்து வளர்க்க வில்லை என்பதையும் குறிப்பிட வேண்டும். தண்ணீரூற்ற மறந்து விட்டு செடி வாடுவதைப் பற்றிக் கவலைப் படுவதிலோ குறை சொல் வதிலோ என்ன அனுதாபம் இருக்க முடியும்?

நல்ல இலக்கியச் சூழ்நிலை உருவாகப் பாடுபடும் ஒவ்வொரு தமிழ்ப் பத்திரிகையையும் வளர்க்கும் முனைப்பு தமிழர்களுக்கு உடனே வர வேண்டும். பகட்டுக்கும் டம்பத்துக்கும் இரையாகிற மனப்பான்மையும் புதுமையை வரவேற்கத் தயங்குகிற மனப்பான் மையும் மாற வேண்டும்.

பத்திரிகை நடத்துகிறவர் எத்தனை இலட்சம் முதலீடு செய்ய முடிந்தவர் என்று லேவாதேவிக் கணக்குப் பார்க்கும் மனப்பான் மையே பல தமிழர்களுக்கு இன்னும் இருக்கிறது. எவ்வளவு நல்ல எண்ணங்களை முதலீடு செய்ய முடிந்தவர் என்று பார்த்து ஆதரிக்கிற மனப்பான்மை இன்னும் வரவில்லை. வருந்திக் கண்ணீர் சிந்த வேண் டிய நிலைமை இது. குணத்தை வாயளவில் போற்றுகிறார்கள். பணத் தையும் பகட்டையும் மட்டுமே மதிக்கவும், மிரளவும், நம்பவும், பழகிக் கொண்டிருக்கிறார்கள்.

திலகரும் பாரதியும் தேசபக்தியை முதலீடாக வைத்துப் பத்திரிகைகள் தொடங்கி விடுதலைக்குப் போராடிய தேசம் இது என்பதை மறந்து விடுகிறார்கள். பதினைந்து கோடி முதலீடு செய்து ஒரு மோசமான ஆபாசத்தைத் தொடங்கினால் நம்பவும் பயப்படவும் செய்கிறார்கள். நான் முன்பு சொன்ன நாட்டுப்புறத்து தொழில் செய்கிறவனை மதிப்பதில்லை - மனிதனாகவும் நினைப்பதில்லை. இந்த நிலை மாற வேண்டும் என்பதைத் தீபத்துக்கு மூன்றாவது வயது பிறக்கும் இச் சமயத்தில் நினைவூட்ட விரும்புகிறேன்.

நல்லதை ஆதரியுங்கள். பத்திரிகைத்துறையில் மட்டுமல்ல. எல்லாத்துறையிலும் நல்லதை அவசரமாகவும் தைரியமாகவும் ஆதரியுங்கள். ஒருவேளை நீங்கள் தயங்குவதற்குள் கெட்டது வந்து மேலே மூடி விடலாம் என்பது ஞாபகமிருக்கட்டும்.

என்னுடைய தார்மீகக் கோபத்தோடு கூடிய இந்த நினைவுகளைத் தீபம் வாசகர்களோடு பகிர்ந்து கொள்வதன் மூலம் தீபத்தின் மூன்றாவது ஆண்டைத் தொடங்குகிறேன். மேலே சொன்ன குறைகளை தீபத்தின் மனத்தாங்கல்களாக மட்டும் எடுத்துக் கொள்ளாமல், இமயம் முதல் குமரி வரை இந்தத் தேசத்தில் இலட்சியங்களுக்காகப் போராடும் எல்லா நல்ல பத்திரிகைக்காரர்களின் மனத்தாங்கல்களாகவும் எடுத்துக் கொள்ள வேண்டுகிறேன்.''

இரண்டாம் ஆண்டு நிறைவில் வெளியான 'தீபம்' 24வது இதழில் இப்படி ஒரு நீண்ட தலையங்கம் எழுதித் தன் ஆதங்கத்தை வெளிப்படுத்தினார் நா.பா. தமிழ் வாசகர்களின் கடமையை அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்தத் தவறவில்லை.

''வளரும் எங்களது ஆர்வம் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பயன்பட முடியுமானால் அதுவே நாங்கள் பெறும் பயனாக இருக்கும்.

ஏதாவது உப்புப்புளி போன்ற ஒரு வியாபாரத்திலோ, அல்லது கொள்முதலிலோ, கடை விற்பனையிலோ, அதிக லாபமில்லாமல் சிரமப்படுகிறவனுடைய அதே நஷ்டச்சோர்வு, இலக்கிய வியாபாரத்திலோ இலக்கியக் கொள்முதலிலோ ஈடுபடுகிறவனுக்கு வரக்கூடாது என்றெண்ணித் திடமாகச் செயல்படுகிறவர்கள் நாங்கள். சிரமப்படும்

போதும் நஷ்டப்படும் போதும் தான் எங்களுக்குள்ளேயிருக்கிற தன்னபிக்கையும் முயற்சித்திறனும் மிகப் பெரிதாக விசுவரூபம் எடுக் கின்றன.

இந்த நிலைமையை தீபத்தின் ஒவ்வொரு வாசகரும் உணர வேண்டுமென்று அன்போடு வேண்டிக்கொள்கிறோம். மறுபடியும் மறுபடியும் தமிழ்ப் பெருமக்களுக்கு நாங்கள் நினைவூட்டுவதெல் லாம் நல்ல இலக்கிய ஏடுகளை உரிய காலத்தில் உரிய பிடிவாதத் தோடு ஆதரிக்க வேண்டும் என்பதே'' ('தீபம் இரண்டாது ஆண்டும லரில் நா.பா. எழுதியது.1967)

'தீபம்' தனித்தன்மையோடு வளர்ந்து வந்தது. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஆர்வம் கொண்டிருந்த நா.பா. அனைத்து இந்திய மொழிகளின் இலக்கிய வளர்ச்சியையும் தமிழ் வாசகர்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்பதிலும் கவனம் செலுத்தினார். தமிழ் நாட்டி னர் தமிழ் எழுத்தாளர்களைப் பற்றி நன்கு தெரிந்து கொள்ள வேண் டும் என்பதோடு, இதர இந்திய மொழிகளின் புகழ் பெற்ற எழுத்தா ளர்களைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதிலும் அக் கறை காட்டினார். அதன் பிரதிபலிப்பு 'தீபம்' இதழ்களில் பளிச்சிட் டது. இம்முயற்சியில் பொருளாதார சிரமங்களும் கஷ்ட நஷ்டங்க ளும் மிகுதியாகவே எதிர்ப்பட்டன.

''ஒரு சீராய் - நிதானமாய் - ஒளிபரப்பும் மங்கலமான குத்து விளக்குப் போல் பதறாமல் - பயப்படாமல், நிதானமாய் தனது இலக்கியப் பணியை செய்து வருகிறது தீபம். ஆடம்பரமான மின் விளக்குகள் பல வந்து விட்டாலும் அகல் விளக்கும் குத்து விளக்கும் எப்படி பண்பாட்டின் மங்கலச் சின்னங்களோ, அப்படியே கவர்ச்சி யையே முக்கியமாகக் கொண்ட பல பத்திரிகைகளிடையே தீபம் போன்ற தீவிர இலக்கிய இலட்சியப் பத்திரிகைகளும் நமது கலை இலக்கியப் பண்பாட்டின் சின்னங்களாயிருக்க முடியும்.

நாட்டில் நன்றாகப் படித்தவர்களிடம் கூட ஆழமான அம்சங்க ளும் அழுத்தமான அம்சங்களும் உள்ள இலக்கியப்பத்திரிகைகளை வாசிக்கும் பழக்கம் குறைவாயிருக்கிறது. இந்த நிலை மாற வேண் டும். காபி அருந்துவது, திரைப்படம் பார்ப்பது போல் பத்திரிகை

படிப்பதும் ஒரு கவனத்துக்குரிய அம்சமாக வளர வேண்டும். தினப் பத்திரிகை படிக்கும் பழக்கத்தோடு அமைந்துவிடாமல் உணவில் வைட்டமின்கள் போல் இலக்கிய சக்திகளை நிறையத் தரும் பத்திரி கைகளையும் தேடிப்படிக்கும் பழக்கமும் ஆர்வமும் தமிழ் மக்களி டையே பெருக வேண்டும் என்பது தீபத்தின் அவாவும் இலட்சியமும் ஆகும்.''

இவ்விதம் நா.பா. 'தீபம்' 37வது இதழில் (ஆண்டுமலர் - ஏப்ரல் 1968) கருத்து தெரிவித்தார்.

''ஓர் இலக்கியப் பத்திரிகைக்குள்ள சிரமங்களும் பெருமிதங்க ளும் போல் உலகில் வேறு எதிலும் கிடையாது. சிரமப்படுவதால் தான் பெருமிதம் அடைய முடிகிறது. சிரமங்களைக் கடக்க முயல்வது தான் பெருமிதமாகவும் இருக்கிறது'' என்ற உணர்வுடன் செயல் புரிந்தவர் நா.பா. அவரது பொருளாதார சிரமங்களை அவர் வெளி யிட விரும்பியதில்லை. தீபம் இதழை ஓர் இலக்கிய இயக்கமாக வளர்ப்பதிலேயே அவர் கருத்தாக இருந்தார். அவருடைய மன உறுதியும் அயராத உழைப்பும், அவரைப் போலவே மன உறுதியும் அவரிடம் பாசமும் அன்பும் கொண்டிருந்தவர்களின் ஒத்துழைப்பும், இவ்வகையில் அவருக்கு வெற்றி கிட்டச் செய்தன. இருப்பினும் அவர் செலுத்த நேர்ந்த 'விலை' அதிகமாகவே இருந்தது என்று தான் சொல்ல வேண்டும்.

''தீபத்தை பிடிவாதமாக நடத்தும் ஒரே திருப்திக்காக நான் சிலரது அதிருப்திகளையும் சம்பாதித்துக் கொண்டதுண்டு. இந்தப் பத்திரிகையை நான் தொடங்கும் போது எனக்கு மதுரையில் ஒரு வீடு இருந்தது. பத்திரிகையைக் காப்பாற்ற என் குடும்பத்தாருக்குச் சொல் லாமலேயே அதை நான் விற்க நேர்ந்து விட்டது. பத்திரிகை நடந்தாக வேண்டும் என்ற ஒரே திருப்திக்காக நான் என்னுடையவற்றை எல் லாம் இழப்பது குடும்பத்தினர்க்கும் சில நண்பர்களுக்கும் திருப்திய ளிக்கவில்லை தான் என்றாலும் எனக்குப் பத்திரிகை தான் எல்லாத் திருப்தியுமாக இருந்து வருகிறது. இனியும் அப்படியே இருக்கும்'' என்று நா.பா., 1974 ஏப்ரலில் பத்தாவது ஆண்டு ஆரம்பத்தில், உறுதியாக அறிவித்தார். அதுவரை 'தீபம்' 108 இதழ்களும், தனியாக 2 ஆண்டு மலர்களும் (ஆக 110 இதழ்கள்) பிரசுரம் பெற்றிருந்தன.

பத்தாவது ஆண்டின் நிறைவின் போது, ஆண்டு மலராக வந்த 121வது இதழில், 'பத்தாண்டுகளில் நம் பாதை' என்ற தலைப்பில் நா.பா. எழுதியது இது -

''தீபத்தின் வரலாற்றில் கவலைகளும் உவகைகளும், போராட் டங்களும், வறுமைகளும், புதுமைகளும், பொறாமைகளும், வசதிக் குறையும் மன நிறைவுமாகப் பத்தாண்டு ஓடிவிட்டது! தொடங்கும் போது 'பல பத்திரிகைகளோடு தீபமும் வருகிறது' என்று தான் தமிழ் வாசகர்கள் நினைத்தார்கள். நாளடைவில் 'தமிழில் தீபம் வருகிறது. வேறு பல பத்திரிகைகளும் வருகின்றன' என்று தன் வாசகர்களைப் பிரித்து எண்ணச் செய்யும் நம்பிக்கையை தீபம் படிப்படியாக வளர்த் தது. தீபம் என்பது ஒரு நம்பிக்கை. பிறகு பத்திரிகையும் கூட தீபம் என்பது ஓர் இலக்கு. பிறகு இலக்கியம். தீபம் என்பது ஓர் இலக்கிய இயக்கம். பிறகுதான் பத்திரிகை. வியாபார ரீதியாக இதில் முதல் போட்டு இதை லாபயந்திரமாக வளர்க்க முன்வந்த பலரை நான் அனுமதிக்காத காரணம் இதன் இலக்கும் நம்பிக்கையும் தடுமாறக் கூடாது என்பது தான். மாற்றியிருந்தாலோ, மாறியிருந்தாலோ, திசை தவறியிருந்தாலோ இதையும் பணவளமுடையதாக்கி என்னையும் செழிப்பாக்கியிருப்பார்கள் சில வசதியுள்ள நண்பர்கள். முதலிலி ருந்தே அதில் உறுதியாக இருந்து விட்டேன். இதன் தரமான வாசகர் கள் அளித்த நல்லெண்ணம் தான் அதற்குக் காரணம்.''

நா.பா. ஒரு இலட்சியவாதி. காந்தீய தத்துவத்தில் மிகுந்த பற்றுக் கொண்டிருந்த தேசியவாதி. நாட்டினிடத்தும் நாட்டு மக்களிடமும் அன்பும் அபிமானமும் உடைய மனித நேயர் அவர். மக்களின் கலை, பண்பாடு, ஒழுக்கம் முதலியன சிதைவுறாது பேணிக்காக்கப்படுவது டன், அவை நல்ல முறையில் வளர்க்கப்பட வேண்டும் என்ற நோக் கம் கோண்டிருந்தார் அவர். நல்லியக்கத்திலும் அதன் வளர்ச்சியிலும் நாட்டமுடைய நல்ல எழுத்தாளர் அவர். இப் பண்புகள் பலவும் நா.பா வின் எழுத்துக்களிலும், 'தீபம்' இதழிலும் ஒளிபரப்பிக் கொண் டிருந்தன. இவற்றுக்கு மேலாக, தீமைகள் - சிறுமைகள் கண்டு கொதிப்புறும் தார்மீகக் கோபம் (அறச்சீற்றம்), ஊழல்களைச்சாடும் சத்திய ஆவேசம், பொய்யை - பொய்மைகளை எதிர்க்கும் நேர்மை, எதற்கும் - யாருக்கும் அஞ்சாத மெய்த்துணிவும், தனக்கு சரியெனப்

பட்டதை சொல்லும் - செய்யும் செயல் வேகமும் முதலியன அவருக்கும் அவர் எழுத்துக்களுக்கும் ஒரு தனித்தன்மை சேர்த்தன.

நா.பா. 'தீபம்' வளர்ச்சிக்காக உற்சாகமாகவும் அதிகமாகவும் உழைத்தார். பத்தாண்டு வளர்ச்சி குறித்து எழுதியதற்குப் பிறகு, பிந்திய வருடங்களில் அவர் பத்திரிகை நடத்துவதில் இருந்த சிரமங்கள் பற்றி எழுத்தில் எதுவும் குறிப்பிடவில்லை. பொதுவாக இலக்கிய உலகில் நிலவும் குறைபாடுகள், பத்திரிகைத் துறையின் சிறுமைகள், பண்பாட்டுச் சிதைவுகள் போன்ற விஷயங்கள் பற்றி தீவிரமாகவும் அழுத்தமாகவும் கருத்துக்களை வெளியிட்டார்.

எத்தகைய இலட்சியவாதியாக இருப்பினும், ஒரு மனிதன் என்ற தன்மையில் எவருக்கும் சில நேரத்தில் உள்ளத்தில் சிறு விரக்தியும் வருத்தமும் ஏற்படுவது இயல்பேயாகும். அப்படி ஒரு கணத்தில் அவர் மணிவண்ணன் என்ற பெயரில் எழுதிய கவிதை ஒன்று அவருடைய மனச் சோர்வை பிரதிபலிப்பதாக அமைந்து காணப்படுகிறது.

பூமியில் வல்லவர் நடுவினிலே - நான்
    பொய்யை எதிர்த்துக் கொதிக்கின்றேன்
மாமிசம் விற்பவர் நடுவினிலே -நான்
    மலர்களைத் தேடித் தவிக்கின்றேன்
பசியைக் காட்டிப் பயமுறுத்தல் - வெறும்
    பலத்தைக் காட்டிப் பயமுறுத்தல்
வசியப் படுத்தி வசப்படுத்தல் - என்
    வாழ்வைக் காட்டி அதிரவைத்தல்
சாதியைக் காட்டித் தூற்றிடுதல் - ஒரு
    சாதியும் இல்லா மானிடத்தைப்
பேதப்படுத்திப் பிழைத்திடுதல் - இவை
    பெருகிப் படரும் காலத்தில்
நீதியைத் தேடி புறப்பட்டேன் - நான்
    நெடுந்தூரம் ஓடிக் களைத்துவிட்டேன்
பாதியில் திரும்ப மனம் இல்லை - என்
    பாதையை மாற்றவும் நினைக்கவில்லை
சாமியை நம்பித் தொழுத பின்னே - இங்கு
    சத்தியம் ஜெயிக்க வேணும் என்றே

பூமியில் முழுதும் தேடியபின் - காலில்
புழுதியும் படிந்தே வாடிய பின்
காமக் குரோத லோபத்தால் - வீண்
சுயமைக் குணத்தொரு தாபத்தால்
மாமிசம் விற்பவர் நடுவினிலே - நான்
மலர்களைத் தேடித் தவிக்கின்றேன்.
பித்தர்கள் நிறைந்த உலகினிலே - நான்
பேதமை நீங்கித் தவிக்கின்றேன்
எத்தர்கள் மலிந்த இந்நாளில் - நான்
ஏழ்மையில் நலிந்து கொதிக்கின்றேன்
கொள்கையை விடவும் முடியவில்லை - ஊரைக்
கொள்ளை இடவும் துணியவில்லை
உண்மையைத் தேடி ஓய்ந்து விட்டேன் - உயிர்
உள்ளதை நாடி மாய்ந்து விட்டேன்
பூமியில் வல்லவர் நடுவினிலே - நான்
பொய்யை எதிர்த்துக் கொதிக்கின்றேன்.

ஆனாலும், நா.பா. ஒரு போதும் நம்பிக்கையை இழந்ததுமில்லை. சோர்வு மிகுந்து செயலூக்கத்தை கைவிட்டதுமில்லை. குடும்பப் பொறுப்பும், பத்திரிகைப் பொறுப்பும் அவரை அழுத்தின. அதனால் அவர் மிக அதிகமாகவும் கடுமையாகவும் உழைக்கலானார். தீபத்தில் அதிகமாக எழுதியதைக் குறைத்துக் கொண்டு, தாராளமாக 'சன்மானம்' தரக்கூடிய ஜனரஞ்சகப் பத்திரிகைகளுக்கு தொடர்ந்து எழுதுவதில் அக்கறை செலுத்தினார். சிறிதளவு பணம் கொடுக்கக்கூடிய சங்கங்கள், அமைப்புகளுக்கும் சொற்பொழிவு நிகழ்த்தச் சென்றார். கருத்தரங்குகள், மகாநாடுகளில் கலந்து கொள்வதற்காக வெளிமாநிலங்களுக்கும் வெளிநாடுகளுக்கும் போய் வந்தார். 'மாதநாவல்' என்று பிரசுரம் பெறுகிற சஞ்சிகைகளுக்கும் எழுதிக் கொடுத்தார். கிடைத்த பணத்தை எல்லாம் 'தீபம்' இதழைக் காப்பாற்றுவதற்கே செலவிட்டார்.

பிறகு 'தீபம்' நலனுக்காக, நா.பா. 'தினமணி' பத்திரிகையில் பணி புரியச் சேர்ந்தார். சில வருடங்கள் அந்த நிறுவனத்துக்காக உழைத்தார்.

இவ்விதம் 23 வருடங்கள் 'தீபம்' நா.பார்த்தசாரதியால் வளர்க் கப்பட்டது. இலக்கிய உலகில் தனியானதொரு இடத்தை 'தீபம்' பெற முடிந்தது. இதழியல் வரலாற்றில் சிறப்பான இடம் தீபத்துக்கு உண்டு. அவ்விதம் தடம் பதித்துள்ள இலக்கிய இதழ் 'தீபம்' சாதனைகளை அதன் வரலாறு எடுத்துக்காட்டுகிறது.

கடும் நோயால் பாதிக்கப்பட்டு, சிகிச்சைகளினாலும் பலன் இல்லாமல், திடீரென்று 1987 டிசம்பரில் நா.பா. அமரரானார்.

'தீபம்' என் நோன்பு - தவம்' என்று அறிவித்த நா.பா.வுக்கு ஆரம்பம் முதலே உதவியாக இருந்து, பத்திரிகையின் அலுவலக மற்றும் நிர்வாகப் பணிகள் முழுவதையும் ஒரு அர்ப்பணிப்புடன் கவனித்து வந்தவர் எஸ். திருமலை.நா.பா.வின் உறவினர் அவர்.

நா.பா.வின் 'நோன்பு' வெளிப்படையாகத் தெரிவது. பத்திரி கையின் துவக்க காலம் முதல் அதன் இறுதிவரை அதற்காகவே வாழ்ந்து உழைத்த திருமலையின் வாழ்க்கையும் ஒரு வேள்வி என்றே சொல்ல வேண்டும்.

நா. பா. மறைந்ததற்குப் பிறகு, 1988 ஜனவரி-பிப்ரவரியிலும், மார்ச்சிலுமாக 'தீபம்' இரண்டு இதழ்களை திருமலை தயாரித்து வெளியிட்டார். பின்னர் காலத்தின் கட்டாயத்தால் 'தீபம்' இதழ் நின்று விட நேரிட்டது.

ஈடு செய்ய முடியாத இழப்பு தான் அது.

ஆழ்ந்த இலக்கிய ரசிகர்களும், எழுத்தாளர்கள் பலரும், தர மான வாசகர்களும் இதை உணர்ந்தார்கள். அவ்வப்போது தங்கள் எண்ணத்தை வெளியிடத் தயங்கியதுமில்லை.

அத்தகைய சிறப்பை 'தீபம்' அடைந்தது எவ்வாறு? அதற்கு வகை செய்த சாதனைகள் தான் என்ன?

# 2. தீபம் முதல் இதழ்

1965 ஏப்ரல் மாதம், சித்திரை மாதப் பிறப்பன்று (தமிழ் வருடப் பிறப்பின் முதல் நாள் அன்று) 'தீபம்' பத்திரிகையின் முதலாவது இதழ் பிரசுரமாயிற்று.

'எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்த நல்லறிவு வேண்டும்'

எனும் பாரதி வாக்கை தன் குறிக்கோளாக ஏற்று, தீபம் இவ்வரிகளை ஒவ்வொரு இதழிலும் முகப்பில் அச்சிட்டு வந்தது.

முதல் இதழில் நா.பா. 'திக்கெட்டும் பரவுக தீபச்சுடர்' என்று விசேஷமான ஒரு தலையங்கம் எழுதியிருந்தார். அதன் முக்கியத்துவம் கருதி அந்த நீண்ட தலையங்கம் முழுமையாக இங்கு தரப்படுகிறது.

''தமிழ்ப் பெருமக்களுக்கு இதோ இன்று ஒரு நல்ல செய்தி. குரோதி நீங்கி இன்று விசுவாவசு வருடம் பிறக்கிறது. இந்தப் புதிய ஆண்டும் நமது தீபமும் சேர்ந்து பிரகாசிக்கத் தொடங்கும் முதல் நாள் இது. நல்ல நாளில் என்னைப் பற்றியும் என் முயற்சியைப் பற்றியும் இதோ உங்களிடம் சில வார்த்தைகள்.

பரிசுத்தமான எண்ணங்களுடனும் தணியாத சத்திய வேட்கையுடனும் எல்லா இடங்களிலும் அறிவின் பிரகாசமும் உண்மையின் ஒளியும் துலங்க வேண்டுமென்ற உயர்ந்த இலட்சியத்துடனும் இன்று இந்தத் தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் நான் ஓர் இலக்கியத் தீபத்தைப் பக்தி சிரத்தையோடு ஏற்றி வைக்கிறேன். இதன் பிரகாசத்தில், பகைமை, போட்டி, பொறாமை, இலக்கிய மாரீசம், நாட்டைக் கெடுக்கும் நச்சு இலக்கியப் புல்லுருவிகள் ஆகிய விதவிதமான இருள்களெல்லாம் அகன்று விலகி ஓடுமாக! தீபம் நல்லவர்களாகிய எல்லார்க்கும் ஒளியாகவும் தீயவர்களாகிய எல்லார்க்கும் சுடுநெருப்பாகவும் இருக்கும். அப்படித்தான் இருக்கவும் வேண்டும்.

நான் இன்று தொடங்கும் இந்தப் பத்திரிகை ஏற்கெனவே என்றுமி ருக்கும் எந்தப் பத்திரிகைக்கும் போட்டியோ எதிரியோ அல்ல. எந்தப் பத்திரிகையும் இதுவரை சாதிக்காமல் இந்தப் பத்திரிகை இனி மேல் சாதிப்பதற்கென்றே சில துணிவான இலக்கிய முயற்சிகள் இன்னும் மீதமிருக்கின்றன. தீபம் இனி அத்தகைய இலக்கியக் காரி யங்களைத் தொடங்கி மேற்கொள்ளுவதற்கு இருக்கிறது. இதனு டைய ஜகஜ்ஜோதியான புதிய பிரகாசத்தினால் எதனுடைய பழைய அழுக்குகளாவது தெரியுமானால் அது அப்படித் தெரிவதில் அழுக்கு இருக்கிறதென்பதைக் குறிக்குமே ஒழிய-இது அந்த அழுக்கைத் தென்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டு பிரகாசிக்கிறதென்பது ஆகாது - இதன் குணம் பிரகாசம் என்பது மட்டும் தான் இங்கு நமக்கு தேவையான உண்மை. எனவே அதை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

இன்றைய நிலையில் ஒரு புதிய பத்திரிகை தொடங்குவதிலுள்ள கஷ்டங்களையெல்லாம் நண்பர்கள் நிறைய எடுத்துச் சொன்னார் கள். இது கஷ்டம் நிறைந்ததென்பதனாலேயே இதைத்தான் தொடங் வேண்டுமென்ற தீரனின் ஆசை - இயல்பான ஆசை - நியாயமான ஆசை - எனக்கும் எழுந்தது. இதில் சிரமங்கள் நிறைய இருக்கின்றன என்பதனாலேயே இதை நான் துணிந்து மேற்கொள்ள வேண்டியவ னாகிறேன். இந்த வழியில் இலட்சிய வேகமுள்ள பல நல்ல எழுத்தா ளர்கள் ஏற்கெனவே தொடர்ந்து சென்று ஒருவர் பின் ஒருவராகத் தோற்றிருக்கிறார்கள் என்பதனாலேயே அவர்கள் சார்பில் அவர்களு டைய தோல்விகளுக்கெல்லாம் வட்டியாக இதில் நான் வெற்றி பெற வேண்டுமென்ற தன்னம்பிக்கை எனக்கு வந்திருக்கிறது. இந்தத் தன் னம்பிக்கை தான் என்னிடம் நான் வெற்றி பெறுவதற்காக வைத்திருக் கும் வைரம் பாய்ந்த ஆயுதம். இது மேடு பள்ளம் நிறைந்த பாதை என்பதாலேயே இதில் நான் துணிந்து நடப்பதற்காக எப்போதும் போல் வலது காலை முன்னெடுத்து வைத்திருக்கிறேன். என்னுடைய இந்த வழியில் இடையூறுகள் நிறைய இருக்கும் என்பதே எனக்கு மலையத்தனை தைரியத்தை அளிக்கிறது. நான் இன்று ஏற்றி வைக் கிற இந்தத் 'தீபம்' தமிழிலக்கிய உலகில் சகல இருளையும் நீக்கிப் புத்தொளி பரப்ப வேண்டுமென்று எனக்குக் கொள்ளை ஆசை - நான்

இதை ஏற்றி வைக்கிறேன் என்பதனால் மட்டும் அல்ல. என்னால் ஏற்றப்படுவது எதுவோ அது சத்தியவேட்கை மிக்கதோர் சுடர் என்ப தால் தான். இந்த ஞான நெருப்பில் நானே தீக்குளித்து எழத் துணிந்தி ருப்பதற்காகத் தமிழ்த்தாய் நிச்சயம் என் பக்கலில் துணை நிற்பாள். தமிழன்பர்களாகிய நீங்களும் துணை நிற்பீர்களென்ற நம்பிக்கையும் எனக்கு உண்டு.

இது வேறு வழி இல்லாத காரணத்தால் இலட்சக் கணக்கில் பணம் முடக்கும் 'ஓர் காகித வியாபாரி' நடத்த முன்வரும் இச்சை - பச்சை - நிறைந்த கவர்ச்சிப் பத்திரிகை அல்ல. தன்மானமும் நேர்மையுமே இரு கரங்களென நம்பும் ஓர் அசல் எழுத்தாளனின் ஆத்ம சோதனை தான் இந்தப் பத்திரிகை. இதற்கு நீங்கள் அளிக்கும் ஆதரவு ஓர் நியாயமான எழுத்தாளனுக்கு அளிக்கும் ஆதரவாகும். இதைவிட அதிகமாக இதன் சத்தியத்தை வற்புறுத்த வெறும் வார்த் தைகளை நான் சாட்சிக்கழைக்கத் தயாராயில்லை.

முன்பு வளர்ந்து கருகிய எல்லா நல்ல பத்திரிகளையும் போல் இதுவும் விரைவில் வாடிக் கருகி நின்று விட வேண்டும் - அல்லது நின்று விடும் என்று நம்புகிறவர்களுக்கு ஒரு வார்த்தை. இது தோற்று விடும் என்று எவ்வளவு பலமாக நீங்கள் நம்புகறீர்களோ, அதே போன்ற அல்லது அதை விட அதிகமான பலத்தோடு இது வெற்றி பெற வேண்டுமென்று நான் நம்புவதற்கும் எனக்கு உரிமை உண்டு அல்லவா? பல நல்ல பத்திரிகைகளை ஆதரிக்கத் தவறித்தின்று விழுங்கித் தீர்த்து ஏப்பம் விட்டுவிட்டு நிற்கும் பண்பார்ந்த தமிழகம் இதையும் அப்படிச் செய்யுமானால் அதற்காக நான் ஏன் வருந்த வேண்டும்? நான் ஏன் வெட்கப்பட வேண்டும்? தமிழர்களின் பெருந் தன்மைக்கு இதுவும் ஒரு சோதனை! யார் ஜெயிக்கிறார்களென்று பொறுத்திருந்து தான் பார்ப்போமே! ஸ்டீபன் ஸ்பெண்டரும், டி.எஸ். எலியட்டும் தங்கள் தனித்துவத்தோடு மேற்கு நாடுகளில் ஓரோர் இதழ்களை நடத்தியிருக்க முடியுமானால் இங்கும் ஏன் அப்படிப் புதியதுவும் தரமானதுவுமான நல்ல முயற்சிகள் வளரலாகாது? இதற் குத் தமிழ்ப் பெருமக்கள் தான் பொருத்தமும் பயனும் அமைகிற வகையில் ஒரு சரியான நல்ல பதிலைச் சொல்லுதல் வேண்டும்.

நில்லுங்கள் ஒரு நிமிஷம்! இறுதியாக இன்னும் ஒரு வார்த்தை! இந்த முயற்சிக்காக நான் சேர்த்திருக்கிற மூலதனம் வெறும் பணம் மட்டுமேயல்ல. மனோதர்மமும் தன்னம்பிக்கையுமே எனது பலமான மூலதனங்கள். ஒரு காகித வியாபாரி பத்திரிகை தொடங்கும் போது அவர் விற்கும் காகிதத்தைப் போலவே மற்றொரு வர்ணக் காகிதமா கிய பணமும் அதிகாரமுமே அதற்கு மூலதனமாகலாம். ஆனால் ஓர் எழுத்தாளன் பத்திரிகை தொடங்கும் போதோ பணத்தைவிட மனோ தர்மமே பெரிய மூலதனமாக அமைய முடியும். அப்படித்தான் நானும் அமைத்துக் கொண்டிருக்கிறேன் இப்போது. எனவே தீபத் தின் சந்தாதாரர்களுக்கும் விற்பனையாளர்களுக்கும், இதுவரை அரு கில் நெருங்கி வராத விளம்பரதாரர்களுக்கும் இந்த விநாடியில் அன் புடன் ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன்.

ஓர் சத்தியமான எழுத்தாளனின் மனோதர்ம முயற்சிக்கு நீங்கள் எப்படி எப்படியெல்லாம் துணை நிற்க முடியுமோ அப்படி அப்படி எல்லாம் தயை செய்து துணை நிற்க வேண்டும். இந்தப் பத்திரிகை யின் விலை இப்போது சற்றே அதிகமாகத் தோன்றலாம். எழுத்தாளர் கள் சன்மான விஷயத்திலும், வேறு பல துறைகளிலும் இந்தப் பத்தி ரிகை மேற்கொண்டிருக்கும் உறுதி காரணமாகவும் பொறுப்புக் கார ணமாகவும் 75 காசு விலை வைத்தாலே ஓரளவு நஷ்டத்தினைத் தான் தவிர்க்க முடியுமே ஒழியச் சிறிது லாபத்தையும் கூட எதிர்பார்த்துச் சிந்திக்க முடியுமென்று தோன்றவில்லை. எதிர் காலத்தில் வேறு வசதி கள் பெருகினால் எங்களுக்கு லாபமில்லாது போனாலும் வாசகர்க ளுக்கு அதிக வசதிகள் தரவே நினைப்போம். இதையும் தமிழ்ப் பெருமக்கள் கவனத்தில் கொள்ள வேண்டுகிறேன்.

என்னோடு தோழமை பூண்டு இந்த முயற்சியில் என்னுடன் வரும் இலட்சிய எழுத்தாள நண்பர்களுக்கு நான் நன்றி கூறி முடித்து விடப் போவதில்லை. அந்த உயர்தரமான நட்பை உடனே நன்றி கூறி முடித்து விடவும் நான் தயாராயில்லை. அவர்களுடைய தோழ மையை நான் தொடர்ந்து வழிபட விரும்புகிறேன். வழிபட விரும்பு கிற தோழமைக்கு நன்றி கூறிக் கணக்குத் தீர்த்து விடுவது நியாய மில்லை என்பது என் கருத்து.

தீபம் தமிழ் எழுத்தாளர்களின் சுதந்திரமான சிந்தனைக்கும் நினைவுகளுக்கும் வசதியான ஒரு மேடையாக அமையும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. எழுத்துலகச் சிற்பிகள் சேர்ந்து படைக்கும் இந்த இலக்கிய ஏட்டைப் பலப்படுத்துவதற்குத் தமிழிலக்கியவுணர் வுள்ள ஒவ்வொருவரும் நேரே சந்தாதாராகி ஆதரிக்க வேண்டும். இதை விட இன்னும் நான் இங்கு என்ன சொல்வது? எப்படிச் சொல்வது? உங்கள் உணர்வுகளுக்கும் என் உணர்வுகளுக்கும் நடு வில் வெறும் வார்த்தைகள் வந்து நின்று தானா பேச வேண்டும்? மீண்டும் பார்க்கலாம். அடுத்த இதழில் சந்திப்போம்.

வணக்கம். - அன்பன் நா. பார்த்தசாரதி.

பிற்காலத்தில் அண்ணாசாலை என்று பெயர் மாற்றம் பெற்று விட்ட சென்னை மவுண்ட்ரோடின் அருகே உள்ள எல்லிஸ் ரோடின் கிளைகளில் ஒன்றான நல்லதம்பி செட்டி தெருவில், 6-ம் எண் கட்டி டத்தின் மாடிப்பகுதியில் 'தீபம்' பிறந்தது. தீபம் காரியாலயம் இறுதி வரை அந்த இடத்திலேயே செயல்பட்டது.

'தீபம்' பத்திரிகை அகல வடிவத்தில் - கிரவுன் 1X4 அளவில் - 80 பக்கங்கள் கொண்டிருந்தது. அதன் விலை 75 காசுகள். இந்த விலை வெகுகாலம் மாறுதல் பெறாமலே நீடித்தது.

தீபம் அட்டை வழுவழுப்பான ஆர்ட்தாளில், பளிச்சிடும் பல வர்ணங்களில், இதர பத்திரிகைகளின் அட்டைப்படங்களிலிருந்து மாறுபட்ட தன்மையில் தீட்டப்பெற்ற சித்திரம் ஒவவொரு இதழுக் கும் வசீகரம் சேர்த்து வந்தது.

முதல் இதழின் அட்டைப்படம் பற்றிய விளக்கம் இது -

திருமகளும் நாமகளும் சேர்ந்து

திருமகள் போல் கண் பார்வையும், மனப்பார்வையும் ஒருங்கு பொருந்திய இந்தத் தமிழ்ப் பெண் நாமகளுக்கு முன் தன் நெஞ்சின் பரிசுத்தத்தை ஒரு சுடராக்கி ஏந்துவது போன்ற பாவனையில் தீபத்தை எடுத்து ஏந்தி நாமகளை வணங்குகிறாள். பாரதியாரால் இலட்சுமிகரம் வாசம் செய்யும் இடங்களைப் பற்றி எண்ணப்படும் போது கன்னிப்பெண்ணின் கண் பார்வையும் ஒன்றாக எண்ணப்படு

கிறது. விசுவாச வருடம் பிறக்கிற இந்தப் புண்ணிய புதுநாளில் திருமகள் துணை நின்று தாங்க, நாமகள் ஏற்றுகிற நமது தீபம் நாலா திசைகளிலும் திசைக் கோணங்களிலும் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக் கிறது. திருமகளும் நாமகளும் துணை நிற்கும் போது நாம் வெற்றி பெறத் தடையேது?

எடுத்த காரியம் யாவினும் வெற்றி
எங்கு நோக்கினும் வெற்றி மற்றாங்கே
விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி
வேண்டினேனுக் கருளினள் காளி;
தடுத்து நிற்பது தெய்வதமேனும்
சாகுமானுட மாயினும் அஃதைப்
படுத்து மாய்ப்பவள் அருட் பெருங்காளி,
பாரில் வெற்றி எனக்குறு மாறே.
எண்ணுமெண்ணங்கள் யாவினும் வெற்றி
எங்கும் வெற்றி, எதனினும் வெற்றி
கண்ணுமாருயிரும் மென நின்றாள்
காளித் தாயிங்கெனக் கருள் செய்தாள்.
மண்ணும் காற்றும் புனலும் அனலும்
வானும் வந்து வணங்கி நில்லாவோ?
விண்ணுளோர் பணிந்தேவல் செய்யாரோ?
வெல்க காளி பதங்களென் பார்க்கே.

- என்ற மகிழ்ச்சிக்குரல் முழங்கியபடியே தமிழ்த்தாயின் பாதம லர்களில் சூடி எடுத்துத் தமிழ்ப் பெருமக்களுக்கு இந்த இலக்கிய ஒளி மலரை வரையாத கருத்து வளம் நிரப்பி இன்று முதலாய் வழங்கத் தொடங்குகிறோம்.''

இதழின் உள்ளடக்கம் ரசிகர்களுக்கு மன நிறைவும் மகிழ்ச்சியும் தருவதாக இருந்தது.

திரைக்கு ஒரு திரை என்று ஜெயகாந்தன், நாவல் ஒரு கலை என்று ப. கோதண்டராமன், கதாநாயகர்கள் - ஓர் இலக்கியச் சிந் தனை என்று கு. அழகிரிசாமி, இலக்கிய ரசனை பற்றி 'சித்தம் போக்கு' என்று தி. ஜானகிராமன் எழுதிய கட்டுரைகள், கே.சி.எஸ்.

அருணாசலம், மல்லியம் ராஜகோபால், பி.ச. குப்புசாமி கவிதைகள், ராஜம் கிருஷ்ணன், சுந்தர ராமசாமி, பி.எஸ். ராமையா, நா. பார்த்தசாரதி, க.நா. சுப்ரமண்யம் ஆகியோரின் சிறுகதைகளுடன், கி. ராஜநாராயணன் எழுதிய 'பிரச்னைக் கதை'யான கோமதியும், தி.க. சிவசங்கரனின் நடைச்சித்திரம் ஒன்றும் இடம் பெற்றிருந்தன. மணிவண்ணன் (நா.பா.) எழுதிய 'பிரயாணம்' எனும் குருநாவல் இதழுக்கு சிறப்பு சேர்த்தது.

பொன்முடியின் 'இரத்தினச் சுருக்கம்' மற்றும் வம்பு மேடை எனும் பகுதிகளும் இருந்தன.

நா. பா. வின் காந்தியப் பற்றுதலை எடுத்துக்காட்டும் விதத்தில் காந்தி பற்றிய எண்ணக்குறிப்புகளும், காந்திஜீயின் சிந்தனைகளும் இதழில் பல இடங்களில் பரவிக் காணப்பட்டன. காந்தி பற்றிய சிந்தனைக்கு எடுத்துக்காட்டாக 'காந்தீய சமுதாய சமயம்' என்ற பெட்டிச் செய்தியைக் குறிப்பிடலாம்.

''வைதிகத்திற்கும் லௌகிகத்திற்கும் ஒரு புதிய பாலமாகக் காந்திய சமுதாய சமயம் நமக்குக் கிடைத்தது.

நினைப்பு, சொல், செயல் எல்லாவற்றிலும் எளிமையையும், எல்லாவற்றிலும் இந்திய மனப்பண்பையும் இணைத்துக் கொள்கிற சுதேசிய மனப்பான்மையையும் காந்தியம் இந்த நூற்றாண்டில் நமக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறது.

இந்த வகையில் சிந்தித்தால் மத்துவாச்சாரியார், சங்கரர், ராமானுஜர் போல் காந்தியடிகள் ஒரு புதிய தேசிய சமயத்தைக் கண்டு அளித்த சமுதாய சிற்பியாகிறார். ஆசாரக்கள்ளர்களின் போலியான படிப்பில் சிக்கி இந்தியன் சீரழிந்து விடாமல் நாம் புதிய சமுதாயப்பாதையைக் கண்டு நடக்கச் செய்தவர் காந்தி அடிகள்.''

மகாகவி பாரதியாரின் கருத்துக்களும் அங்கங்கே 'பெட்டிச் செய்தி'களாகத் தரப்பட்டிருந்தன.

# 3. தீபத்தின் சிறப்புகள்

'தமிழ் இலக்கிய உலகில் தீபம் விட்டுச் சென்ற பாரம்பரியம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. வெகுஜனப் பத்திரிகைகளுக்கி டையே இலக்கிய தாகமெடுத்தவர்களின் வேட்கை தணிக்க வந்த ஒற்றை ஊற்றாக இருந்தது தீபம்.'

இவ்வாறு கோமல் சுவாமிநாதன் 'சுபமங்களா' இதழில் 'தீபம்' பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். எழுத்தாளர்களும் இலக்கிய அன்பர்க ளும் உணர்ந்த உண்மை இது.

1965 ஏப்ரல் 15 முதல், 1988 மே வரை, 239 இதழ்கள் பிரசுரம் பெற்ற தீபம் ஒவ்வொரு மாதமும் அதன் தரத்தைக் காப்பாற்றி வளர்த்து வந்துள்ளது. ஒவ்வொரு ஆண்டும் அது பல புதிய அம்சங் களை வெளியிட முயன்றுள்ளது. இலக்கியத்துடன் சமூகப் பிரச்சி னைகளிலும் நாட்டின் நலனிலும் அக்கறை காட்டி வந்தது. சிறப்பான சிறுகதைகள், அருமையான குறுநாவல்கள், புதுமை செறிந்த தொடர் கதைகள், மரபுக்கவிதைகள், புதுக்கவிதைகள் என்று இலக்கிய வடி வங்கள் பலவற்றிலும் நயமும் சுவையும் தரமும் நிறைந்த படைப்பு களை தொடர்ந்து வெளியிட்டது. ஆழ்ந்த, கனமான, சிந்தனைக் கட்டுரைகளையும், இலக்கியப் பிரச்சினைகள் சம்பந்தமான சர்ச்சைக ளையும் பிரசுரித்தது. புத்தக மதிப்புரைக்கு கணிசமான பக்கங்களை ஒதுக்கியது. அனைத்திலும் மேலாக, இலக்கிய வரலாற்று ரீதியான பல தொடர் கட்டுரைகளை விடாது வெளியிட்டு வந்தது.

'நேர் காணல்' முறையில் பிரபல இலக்கிய ஆசிரியர்களின் கருத்துக்களையும், தொழிலதிபர் சந்திப்புகளையும் பிரசுரித்திருக்கி றது. குறிப்பிடத் தகுந்த எழுத்தாளர்களின் அனுபவங்களையும் குறிக் கோள்களையும் 'நானும் என் எழுத்தும்' என்ற தலைப்பில் வெளியிட் டது.

இதர இந்திய மொழிகளின் படைப்புகள் பலவற்றை - நாவல், குறுநாவல், சிறுகதை, கவிதைகளை - மொழி பெயர்த்து வெளியிட்டு

வந்தது. பிறமொழி ஆசிரியர்களைப் பற்றியும், படைப்புகள் குறித்தும் அறிமுகக் கட்டுரைகள் தீபத்தில் இடம் பெற்றன. சுதந்திரத்திற்குப் பின்னர் இந்திய மொழிகளின் இலக்கியங்களின் நிலைமை பற்றி தமிழ் வாசகர்கள் தெரிந்து கொள்ள தீபம் பெரிதும் உதவியது.

இலங்கை, மலேசியா எழுத்தாளர்கள், அவர்களது எழுத்துக்கள் பற்றியும் தீபம் ஆர்வமும் அக்கறையும் காட்டியுள்ளது. அவற்றுக்கான சிறப்பிதழ்களை தயாரித்து வெளியிட்டது.

நினைவில் நிற்கும் முன்னுரைகள், காலத்தால் சாகாத சிறுகதைகள், ஊஞ்சல் கடிதங்கள் என்று அபூர்வமான விஷயங்களைத் தொகுத்துத் தந்தது. 'இரத்தினச் சுருக்கம்' என்று சிந்தனை மணிகளையும், வம்பு மேடை, மறைவாக நமக்குள்ளே என்று சுவையான தகவல்களையும் டில்லி - பம்பாய் - கல்கத்தா மற்றும் மலேசியா செய்திகளைக் கூறும் கடிதங்களையும் தொடர்ந்து பிரசுரித்தது. இலங்கைக் கடிதம் அவ்வப்போது வெளியிடப்பட்டது.

நா. பார்த்தசாரதியின் படைப்பாற்றலின் பன்முகத் தன்மைகளை 'தீபம்' ஒவ்வொரு இதழும் வெளிப்படுத்தியது. அவரது சிந்தனை வீச்சையும் நகைச்சுவை உணர்வையும், சூடாகவும் சுவையாகவும் கருத்துக்கள் கூறும் திறனையும் 'இலக்கிய மேடை' எனும் கேள்வி பதில் பகுதியும் குறிப்புகளும் புலப்படுத்தின.

நா. பா. எழுதிய தலையங்கங்கள் தனித்தன்மையோடு, சிந்தனை வேகமும் தொலைநோக்குப் பார்வையும் கொண்டு ஒளிர்ந்தன.

மறுமலர்ச்சி இலக்கியப் படைப்பாளிகளின் முதல் தலைமுறையை சேர்ந்த பி.எஸ். ராமையா, சி.சு. செல்லப்பா, 'சிட்டி' பெ.கோ. சுந்தரராஜன், க.நா. சுப்ரமண்யம், சோ. சிவபாதசுந்தரம், தி.ஜ.ர., ந. சிதம்பர சுப்ரமண்யன், ஆகியோரின் ஒத்துழைப்பை 'தீபம்' பெற்றிருந்தது. அடுத்த தலைமுறையினரான அகிலன், கு. அழகிரிசாமி, தொ.மு.சி. ரகுநாதன், வல்லிக்கண்ணன், தி.க. சிவசங்கரன்; இவர்களை அடுத்து வந்த ஜெயகாந்தன், சுந்தர ராமசாமி, கி. ராஜநாராயணன், ராஜம் கிருஷ்ணன், தி. ஜானகிராமன், ஆர். சூடாமணி, ஆ. மாதவன், நீல. பத்மநாபன், தி.சா. ராஜு, சார்வாகன்

முதலியவர்களின் எழுத்துக்கள் தீபத்துக்கு ஒளியும் வலிமையும் சேர்த்தன. புகழ்ப் பாதையில் முன்னேறிக் கொண்டிருந்த அசோகமித் திரன், இந்திரா பார்த்தசாரதி, ஆதவன் முதலியோருக்கு தீபம் நல் வாய்ப்புகள் அளித்தது.

புதிதாக எழுதத் தொடங்கியிருந்த வண்ணதாசன். நாஞ்சில் நாடன், கே. ராமசாமி, மோகனன், பா. அமிழ்தன் போன்றோருக்கு 'தீபம்' வளர்ச்சிப் பாதை அமைத்துக் கொடுத்தது.

வாசகர்களையும் இலக்கிய முயற்சிகளில் பங்கு பெறும் படி தூண்டி வந்தது 'தீபம்' தரமான கடிதங்களுக்கு பரிசு அளித்தது. படித்த புத்தகங்கள் பற்றி ரசனைக் கட்டுரைகள் எழுதவும், 'தீபம்' கதைகளை விமர்சிக்கவும், குறிப்பிட்ட சில புத்தகங்களைக் குறித்து விரிவான விமர்சனங்கள் எழுதவும் வாசகர்களை ஊக்குவித்து உற்சா கப் படுத்தியது.

தமிழக நாடோடிக்கதைகள், பல நாடுகளின் குட்டிக்கதைகள் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டு வந்தன.

'தீபம்' திரைப்படம், நாடகம், அரசியல், சமூகப்பிரச்சினைகள், கலாசார விஷயங்கள், விவசாயம், பல்வேறு தொழில் முயற்சிகள் முதலியவற்றிலும் அக்கறை காட்டியது. அவை சம்பந்தப்பட்ட தனிக் கட்டுரைகளையும் தொடர் கட்டுரைகளையும் அவ்வப்போது பிரசு ரித்தது.

இரண்டாவது உலகத்தமிழ் மாநாடு நடைபெற்ற ஆண்டில், தீபம் மிகச்சிறப்பான ஒரு பணியைச் செய்தது. மாநாட்டு நிகழ்ச்சிகளை விரிவாக வெளியிட்டதுடன், மாநாட்டில் வாசிக்கப்பட்ட நல்ல ஆய்வுக் கட்டுரைகளின் சுருக்கத்தை தொடர்ந்து வெளியிட்டது. இலக்கிய அன்பர்களுக்குப் பயன்படக்கூடிய விதத்தில் அரிய கட்டு ரைகள் பலவற்றை 'தீபம்' பிரசுரித்தது.

# 4. வழிகாட்டும் தலையங்கங்கள்

'துணிவு, தன்னம்பிக்கை, எதிர்பாராத திருப்பங்களில் மலைத்துப் போய் நின்று விடாமை தான் சொல்லப்போகும் கருத்துக்களை முதலில் தான் நன்றாக உணர்ந்து ஜீரணித்து, பிறகு பிறருக்குச் சொல்வது ஆகியவற்றோடு கடந்த காலத்தைப் பற்றிய அறிவு, நிகழ்காலத்தைப் பற்றிய தெளிவு, எதிர்காலத்தைப் பற்றிய கணிப்பு, எதிர்ப்பைக் கண்டு வளைந்து கொடுத்து விடாமலிருத்தல் ஆகியவை ஓர் இலக்கியப் படைப்பாளிக்கு மிகமிகத் தேவையானவை என்று நினைக்கிறேன்.'

இவ்விதம் அறிவித்த நா. பா. இப் பண்புகளைக் கொண்டிருந்தார். அவருடைய எழுத்துக்கள் இதற்கு சான்று கூறும். விசேஷமாக, 'தீபம்' பத்திரிகையில் அவர் எழுதியுள்ள தலையங்கங்கள் இப் பண்புகளை நன்கு வெளிப்படுத்துகின்றன.

தமிழ் மறுமலர்ச்சி இலக்கிய வளர்ச்சிக்கு வழிகாட்டும் சிந்தனைகள் வளர்ந்து வரும் எழுத்தாளர்களுக்கு துணை புரியும் ஆலோசனைகள், பிறமொழி இலக்கிய வளர்ச்சியோடு தமிழ் இலக்கிய வளர்ச்சியை ஒப்பிட்டு, நேர்மையாக விமர்சித்து, புதிய கருத்துக்களை வெளியிடல், தற்கால இலக்கியச் சூழல் மற்றும் பத்திரிகைகளின் போக்குகளை சுட்டிக்காட்டுவது - இப்படி அவசியமான கருத்துக்களையும் ஆழ்ந்த சிந்தனைகளையும், சமூகப் பிரக்ஞையோடும் இலக்கிய வேகத்தோடும் அவர் தலையங்கங்களில் எடுத்துக் கூறியுள்ளார்.

சில தலையங்கங்கள் இன்று கூட மிகப் பொருத்தமானவையாகக் காணப்படுகின்றன.

'தீபம்' 15வது இதழில் (ஜூன் 1966) நா. பா. எழுதியுள்ள 'தமிழ் மறுமலர்ச்சி இலக்கியமும் கருத்து ஒருமைப்பாடும்' என்ற தலையங்கம் மிக முக்கியமானது.

''புதுமைத் தமிழ் இலக்கிய வளர்ச்சியின் சாதக பாதகங்களை ஆராய்வதிலும், விமர்சனம் செய்திவலும், விநோதமான ஒரு மனப்

பான்மை இங்கே நம்மிடையே மட்டும் இருக்கிறது. மலையாள எழுத்தாளராகிய தகழி அண்மையில் ஒரு மகாநாட்டில் பேசும் போது 'எங்கள் கேரளத்தில் நல்ல முற்போக்கு இலக்கியம் வளருமே ஒழிய நச்சு இலக்கியமோ, நசிவு இலக்கியமோ, போலி இலக்கியமோ வளர்வதற்கான சூழ்நிலை கிடையாது' என்று பெருமையோடு குறிப்பிட்டிருக்கிறார்.

வங்காளிகளும் தங்கள் மறுமலர்ச்சி இலக்கியத்தைப் பற்றிப் பேசும் போது இப்படிப் பெருமையாகவே சொல்லுகிறார்கள். வலுவான நல்ல அபிப்பிராயங்களை உருவாக்கிச் செயற்படுத்த முடிந்த பத்துப் பெரிய எழுத்தாளர்களுக்குள்ளாவது - வங்காளத்திலும் மலையாளத்திலும் - தங்கள் மொழி, தங்கள் இலக்கியம் - என்ற அளவில் கருத்து ஒருமைப்பாடும் பெருமிதமும் இருக்கிறது.

மலையாளிகள் தகழியையும் வங்காளிகள் தாரா சங்கரையும் உலகுக்குக் காட்டிப் பெருமைப் பட வழியிருக்கிறது. நம் தமிழ் நாட்டிலோ - நமக்குள்ளேயே நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்தாற் போன்ற நிலைமை இன்னும் இருக்கிறது. தமிழ் மறுமலர்ச்சி இலக்கியம் உண்மையிலேயே வளர வேண்டும் என்ற எண்ணமுள்ளவர்களும், முற்போக்கு அடிப்படையில் ஒன்று படுகிறவர்களும் ஓர் இலக்கிய ஒருமைப்பாடு கொண்டு முழுமூச்சாகப் பாடுபடும் நன்னாள் இங்கு வரவேண்டும்.

நம்முடைய பெருமைகளைக் கொண்டாடவும் தமக்குள் ஒற்றுமை ஒருமைப்பாடு எதுவுமில்லை. நம்மிடையே தேங்கிவிட்ட சிறுமைகளை உதறி ஒதுக்கவும் நமக்குள் துணிவு எதுவும் உருவாகவில்லை.

ஏதோ பழைய பத்துப் பேரையே திரும்பத் திரும்பச் சொல்லிப பாராட்டுகிற சிலரும், அதை ஒப்புக் கொள்ளாத சிலருமாக பிரிந்து பட்டிருக்கிறோம் நாம். திறமையுள்ள புதிய நல்ல எழுத்தாளர்களை உற்சாகப்படுத்துகிற விமர்சகர்கள் நமக்கு வேண்டும்.

இலக்கிய மாநாடுகள், கருத்தரங்குகளில் அசல் இலக்கியத்துக்குப் பாடுபடும் நல்லவர்கள் ஒதுக்கப்பட்டுக் காக்கை பிடிக்கும் குணமும், சிபாரிசு பிடிக்கும் திறனும் உள்ளவர்கள் ஓடிப் போய் ஒட்டிக் கொண்டு மாலை போட்டுக் கொண்டு நிற்கிறார்கள்.

பாரதியார், வ.ரா., புதுமைப்பித்தன், கு.ப.ரா., போன்றவர்கள் செழிக்கச் செய்த தமிழ் இலக்கியப் பூஞ்சோலையில் இன்று பல நல்ல செடிகள் பட்டுப் போய் அங்கங்கே கள்ளியும் காளானும் தெரிகின்றன. சில இடங்களில் அற்புதமான பசுமையும், செழிப்பும் கூட அபூர்வமாகத் தெரிகிறது. அவற்றைத் துணிந்து பாராட்டவும் நம் தமிழர்களுக்குப் பெருமிதமில்லை. பலத்த அபிப்பிராய பேதத்துக்கு இடமில்லாத ஒரு நல்ல பரிசாவது இதுவரை இங்கு அளிக்கப்பட்டிருக்கிறதா? அற்புதமாக எழுதும் எந்த தமிழ் எழுத்தாளனின் நூல்களாவது இங்கு இலட்சக்கணக்கில் விற்று அவன் வாழ்வை உயர்த்தியிருக்கிறதா?

எந்த நல்ல பத்திரிகையையாவது உடனே துணிந்து ஆதரித்து வளர வாழத் தமிழ் மக்கள் இதுவரை வழி செய்திருக்கிறார்களா? எட்டாந்தரமாகக் கீழே இறங்கிப் போயிருந்தாலும் அந்தப் பழைய இரண்டு மூன்று பத்திரிகைகளையே வாங்குவது தவிரப் புதிய நல்லவைகள் வளர மனப்பூர்வமாக உதவியிருக்கிறார்களா?

இதற்கெல்லாம் 'இல்லை இல்லை' என்பதை விட வேறு பதில் கூற வழி கிடையாது. காரணமென்ன? இங்கு நல்லதைப் புகழவும் துணிவு இல்லை. தீயதை வெறுக்கவும் துணிவு இல்லை. மொத்தத்தில் அடிப்படையான இலக்கிய ஒருமைப்பாடு எதுவும் இல்லை. பரவலான அரசியல் பின்னணிகளே இலக்கியத்திலும் பிரிவுகள் பிளவுகளை உண்டாக்குகின்றன. இந்த நிலைதான் நீடிக்க வேண்டுமா? - என்பதை மறு பரிசீலனை செய்ய வேண்டிய கட்டத்தில் இருக்கிறோம் நாம்.'' (தலையங்கம். ஜூன் 1966.)

அன்றைக்கு இன்று நிலைமை தீவிர மாற்றங்களைப் பெற்று விடவில்லை என்பதை நேர்மையான நோக்கர்கள் அறிவார்கள். இதற்கு தமிழ் மக்களின் இயல்புகளும் மனப்போக்குகளும் செயல்பாடுகளுமே முக்கிய காரணமாகும்.

இத்தகைய இலக்கியச் சூழ்நிலை குறித்தும் சிந்தித்து, நா. பா. தன் எண்ணங்களை ஒரு தலையங்கத்தில் பதிவு செய்திருக்கிறார். அது மீண்டும் கருத்தில் கொள்ளத் தக்கதாகும்.

''தமிழகத்தில் பொதுமக்கள் அளவில் மறுமலர்ச்சி இலக்கியச் சூழ்நிலை எதுவும் ஆழமாக இன்னும் உருவாகவில்லை.

தமிழர்களுக்குப் பொதுவாகவே ஒரு பாமர வியப்புக் குணம் உண்டு. திடீர்ப் பணக்காரனைப் பற்றியும் நீளப் பேசுவார்கள். திடீரென்று திவாலாகிறவனைப் பற்றியும் நீளப் பேசுவார்கள். விலைவாசி, அரசியல், சினிமா இவை பற்றிப் பேச வேண்டாமென்று சொல்லவில்லை. இவைகளைப் பற்றி மட்டுமே பேச வேண்டாமென்பது தான் நம் வாதம். இலக்கியத் துறையில் விளையும் நல்ல மாறுதலையும் பொது மக்கள் கவனிப்பதில்லை. தீய மாறுதலையும் பொது மக்கள் கவனிப்பதில்லை. விமர்சனம், இலக்கியத்திறனாய்வு, இலக்கிய விவாதங்கள் போன்ற புதிய துறைகளில் பாடுபடும் மறுமலர்ச்சித் தமிழ்ப்புத்தகங்கள், இதழ்களைப் பற்றிப் பொது மக்கள் பலருக்குத் தெரியவில்லை. ஏழாந்தர, எட்டாந்தரப் புத்தகங்கள், பத்திரிகைகளைப் பற்றியெல்லாம் நன்றாகத் தெரிந்திருக்கிறது. அல்லது எல்லாப் பத்திரிகைகள் புத்தகங்களைப் பற்றியும் ஒன்றும் தெரிவதில்லை.

இந்த நிலையில் துடிப்பும் துணிவும் மிக்க தமிழ் மறுமலர்ச்சி இலக்கிய ஏடுகளும், அந்த ஏடுகளையே ஒரு இலக்கிய இயக்கமாகவும் நடத்துகிறவர்களும் என்ன செய்வது, யாரை நம்புவது? யாருடன் தொடர்பு கொள்வது என்பதை நினைக்கும் போதில் நினைவே வறண்டு போகிறது. தமிழகம் முழுவதும் உள்ள தரமான எழுத்தாளர்களும் இலக்கிய அன்பர்களும், நல்ல பத்திரிகைகளை நாடிப்படிப்பவர்களும் ஓர் இலக்கியச் சூழ்நிலையை உருவாக்க முயல வேண்டும். ஊர்தோறும், கிராமந்தோறும், படிப்படியாக இந்த இலக்கியச் சூழ்நிலை உருவாக்கப்படா விட்டால், உயர்தர இலக்கியம் - இலட்சிய இலக்கியம் - இருள் சூழ்ந்து குன்றிப் போகுமோ என்று பயமாயிருக்கிறது.

நமது நூல் நிலையங்களைத் தரமான பத்திரிகைகள் அலங்கரிப்பதில்லை. நமது மக்களில் பெரும்பாலோர் கைகளில் 'வாழைப்பழத் தோலில் சறுக்கி விழுந்த ஹாஸ்யப்' பத்திரிகைகளே அலங்கரிக்கின்றன. நமது இளைஞர்கள் - யுவதிகள் கைகளைச் சினிமா ஏடுகளே நிறைக்கின்றன. இந்த நிலைமையைப் பற்றித் தமிழ் எழுத்தாளர்கள் - தமிழ் இலக்கிய ஆசிரியர்கள், பத்திரிகை ஆசிரியர்கள் யாருமே கவலைப்படுவதாகத் தெரியவில்லை

ஆனால் இந்நிலை பயங்கரமானது. தமிழர்கள் உடனடியாகக் கவலைப்பட வேண்டியது. மொழி தொடர்பாக, இலக்கியம் தொடர் பாக, எழுத்துலகத் தொடர்பாக - தரமுள்ளதை ஒன்று சேர்த்து நினைக் கிற - பேசுகிற - செய்கிற கூட்டம் ஒன்று உருவாவதற்கான இலக்கியச் சூழ்நிலை இங்கு உண்டாகவில்லையானால்,

'நாட்பட நாட்பட நாற்றமும் சேறும்
பாசியும் புதைந்து பயன் நீர் இலதாய
நோய்க் களமாகி அழிகெனும் நோக்
கமோ?
விதியே விதியே தமிழ்ச் சாதியை
என்செய நினைத்தாய்? எனக் குரை
யாயோ?,

என்று பாரதி பாடியது போல் மோசமாகிவிடும். நல்லதைப் போற்றும் தமிழர்கள் இப்படி மோசமான நிலை ஆகிவிடாமல் நாட்டைக் காக்க வேண்டும். இலக்கிய உணர்வும் இலக்கியச் சூழ்நிலையும் ஊரூராக ஏற்பட வேண்டும். இத்தகைய இலக்கிய நிலைமை உருவாகத் தீப மும், தீபத்தை ஒத்த சக பத்திரிகைகளும் உடனடியாகப் பாடுபட வேண்டும். தரமான வாசகர்களும் எழுத்தாளர்களும் இந்த இலக்கி யச் சூழ்நிலை உருவாவதற்கு வேண்டிய ஒத்துழைப்பைத் தர வேண் டும் என்று மனப் பூர்வமாக வேண்டிக் கொள்கிறோம்.''

('இலக்கியச் சூழ்நிலை' - தீபம், ஜூலை 1967)

தமிழ்ப் பத்திரிகைகளின் தரக்குறைவான போக்குகளைக் கண்டு சீற்றத்தோடும், பரிகசித்தும் தலையங்கங்கள் எழுதப்பட்டுள்ளன. முத்திரைக்கதை, நட்சத்திரக்கதை, சிறப்புச்சிறுகதை போன்ற அறி விப்புகளைக் கேலி செய்து 'வளர்ச்சியோ வளர்ச்சி!' என்று ஒரு தலையங்கம் நீட்டியுள்ளார் நா. பா. வியாபார வெற்றி பெறுவதற்காக தரத்தைக் குறைத்து, வாசகர் ரசனையைத் தாழ்த்தும் போக்கில் போட் டியிடும் பத்திரிகைகளின் போக்கை எண்ணி வேதனையோடு ஒரு தலையங்கம் எழுதியிருக்கிறார்.

''இலக்கியத் துறையில் பிரபல தமிழ்ப்பத்திரிகைகளிடையே உள்ள ஒரு போக்கு வருத்தம் அளிக்கக்கூடியதாயிருக்கிறது. தரமும்

புதுமையும், நயமும் பெறுவதில் போட்டி போட்டு வெற்றியடைய முயல்வதற்குப் பதில் தரக்குறைவில் போட்டிபோடும் மனப்பான்மையைக் கண்டு அதிர்ச்சி அடைகிறோம். தமிழ் எழுத்தாளர்களிடையே இதைப் பற்றி ஒரு தார்மீகக் கோபமும் கவலையும் கூட இல்லை. படைப்பாளிகளின் எழுத்து நிரம்ப வேண்டிய பக்கங்கள் ஒவ்வொன்றாகப் பறி போகின்றன.

படைப்பாளிகளிடையே இனவுணர்ச்சியும் தன்மானமும், தொழிற் செருக்கும் உள்ளவர்கள் தங்கள் உரிமைகளுக்காகப் பாடு பட முன் வர வேண்டும். அப்படிப் பாடுபடும் பலம் வாய்ந்த இலக்கிய அமைப்புக்களும் இங்கே உருப்படியாக இல்லை.

ஒவ்வொரு பிரபல பத்திரிகையும் தனக்கென்று தரமும் நயமும் வாய்ந்த தனித்தன்மை ஒன்றைப் பேணாமல், முன்னால் ஓடும் ஏதோ ஒரு பத்திரிகையையே இமிடேட் செய்ய முயல்வது தெரிகிறது. ஒருவருக்குப் பின்னால் ஓடுவதால், அந்த ஒருவர் தான் மேலும் மேலும் முன்னால் ஓட வாய்ப்புக் கிடைக்கும். ஒவ்வொருவரும் ஒரு நல்ல புதுப்பாதை வகுக்க முடியும். அப்படி முடியும் போது ஒரே பாதையில் பின்னால் ஓடுவதால் பயன் என்ன? தமிழ் எழுத்தாளர்களும் வாசகர்களும் இதை இந்த நேரத்தில் நன்றாகச் சிந்திக்க வேண்டும். புதுப்புதுப் பாதைகளை ஏற்கும் மனப்பாங்கு வாசகர்களுக்கும் வர வேண்டும்.'' (ஜூலை 1969)

இலக்கிய வளர்ச்சி குறித்தும், எழுத்தாளர்களின் நலன்கள் குறித்தும் 'தீபம் இடையறாது சிந்தித்து வந்தது. பத்திரிகைகளின் வணிக நோக்கு, சினிமாவால் ஏற்படும் சீரழிவுகள், தமிழ்ச் சமூகத்தின் நிலைமை, இவற்றால் இலக்கியம் பெறும் பாதிப்புகள் பற்றி எல்லாம் தலையங்கங்கள் சிந்தனை ஒளி பரப்பின. உற்சாகம் தராத நிகழ்காலம் எதிர்காலம் பற்றி கவலை கொள்ள வைக்கிறது.

இது குறித்த ஒரு தலையங்கம் ('கவலை தரும் எதிர்காலம்') நினைவுகூரப் பட வேண்டியது ஆகும் -

''தீபமும், தீபத்தை ஒத்த நோக்கமுள்ள சகோதரப் பத்திரிகைகளும், இலக்கியக் கூட்டங்களை முறையாக நடத்தும் சங்கங்களும் நாட்டில் இலக்கியப் பிரக்ஞையை உருவாக்குவதற்குப் பாடுபட்டு

வரும் இதே காலத்தில் கவலையளிக்கும் வேறு காரியங்களும் நடந்து கொண்டிருக்கின்றன. நிகழ்கால நிலைமையைப் பார்த்தால் தமிழ் இலக்கியத்தின் எதிர்காலம் கவலையளிப்பதாக இருக்குமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது.

வயதானவர்களிடையே பாராமுக மனப்பான்மை, இளைஞர்க ளிடையே விரக்தி, நடுத்தர வர்க்கத்தினரிடையே சினிமா மோகம், படித்தவர்களிடையே சகல துறைகளிலும் அவநம்பிக்கை என்றிருக் கிறது நிலைமை. தமிழ் இலக்கிய வளர்ச்சி - கடந்த காலத்துக்கு இணையாகப் புதுமைத் துறைகளில் எதிர்காலத்திலும் வரவேண்டும் என்று நாம் ஆசைப்படுகிறோம். பாடுபடுகிறோம்.

இலக்கியப் பிரக்ஞை உள்ள பத்திரிகைகளின் எண்ணிக்கையும் கூடியிருக்கிற காலம் இது. ஆனாலும் எதிர்காலம் கவலை தருவதா கவே இருக்கிறது.

அரசியல், சினிமா என்ற இரண்டு பூதாகாரமான மனிதர்கள் க்யூவில் முன்னும் பின்னும் நசுக்க, நடுவில் இளைத்த இலக்கியவாதி பயனை அடைவதற்காகத் தான் நிற்கும் வரிசையிலிருந்து மெல்ல மெல்லப் பிதுங்கி வெளியேற்றப்பட்டுக் கொண்டிருக்கிறான்.

சுதந்திரம் அடைந்த மற்ற நாடுகளில் முதலில் முன்னேற்றமும் பயனும் பெறுகிறவர்கள் எழுத்தாளர்கள், விஞ்ஞானிகள், ஆசிரியர் கள் போன்றவர்களாக இருப்பார்கள். இந்தியாவிலோ நிலைமை வேறுவிதமாக இருக்கிறது. எல்லா முன்னேற்றங்களையும் அரசியல் வாதிகளே அடைய, அறிவாளிகளும் விஞ்ஞானிகளும் ஆசிரியர்க ளும் பஞ்சைகளாக அலைகிறார்கள். அறிவாளிகளிடம் நியாயமான திறமையிருந்தும் அவர்கள் எந்தத் திறமையுமில்லாத ஓர் அரசியல் வாதியின் சிபாரிசை நாடி அலைய வேண்டியிருக்கிறது.

சுதந்திர இந்தியாவில் நாட்டின் பொதுச் செல்வாக்கு அறிவாளி, விஞ்ஞானி, ஆசிரியர் ஆகியோருக்குச் சமமாக வர வேண்டும். செல்வாக்கும், காரியங்களைச் சாதிக்கும் திறனும் இருபத்து மூன் றாண்டு ஏகபோகமாக இன்னும் ஒரு சாராரிடமே இருக்கிறது. இந்த நிலை மாற வேண்டும்.

இந்த நிலை மாறாத வரை இந்திய இலக்கியத்தின் எதிர்காலம் கவலையளிப்பதாகவே இருக்கும். இந்தக் கவலையளிக்கும் காலத்தில் தேசபக்தியுள்ள அறிவுத் துறையினர் சலிப்பாகவோ, சோர்வாகவோ இருப்பது பயங்கரமான விளைவுகளை உண்டாக்கும்.'' ('தீபம்' - மே 1970)

இந்த விதம் கவலை வளர்த்தாலும், நா. பா. விரக்தி அடைய வில்லை. நம்பிக்கை குன்றி விட வில்லை. 'தீபம்' மூலம் நம்பிக்கை ஒளி பரப்புவதில் அவர் கருத்தாக இருந்தார்.

'எல்லாப் புகழையும் வழிப்பறி செய்யும் பேராசைக்காரர்களும் அற்பர்களுமான அரசியல்வாதிகள் நிறைந்து விட்ட நாட்டில் அறிவாளிகள் கொண்டாடப்பட மாட்டார்கள். நினைவு கூரப்படவும் மாட்டார்கள். இந்த உண்மை பலமுறை நிரூபிக்கப்பட்டு விட்டதென்றாலும், இளம் இலக்கிய அன்பர்களின் நாளைய உலகைப் பற்றி இன்னும் நமக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆஷாடப்பூதித்தனங்களையும் போலிகளையும் தகர்த்து எறிந்து உண்மையான தொண்டனை கொண்டாட மறுக்காத காலம் வரும் என்று திட்டமாக நம்புகிறோம் நாம். அதற்காக இடையறாது உழைக்கவும் விரும்புகிறோம்' (தீபம். அக்டோபர் 1970) என்று அவர் அறிவித்தார்.

பத்திரிகை ஒரு புனித இயக்கம் என்று வலியுறுத்தியது தீபம் தலையங்கம். எழுத்தாளர் சங்கம் ஆண்டு விழா பற்றி எழுதி, அங்கு ஒலிபரப்பான பேச்சுக்களை விமர்சித்தது. 'செம்மீன் - படைப்பிலக்கியத்திலும் திரைப்பட நோக்கிலும்' என்று ஆய்வு செய்தது. ஈழத்து இலக்கிய வளர்ச்சியை மதிப்பிட்டது. நமது விமர்சன வளர்ச்சி குறித்தும், சிந்தனை ஒருமைப்பாடு பற்றியும், தமிழ்ப் புத்தக விற்பனை பற்றியும் தலையங்கம் வெளியிட்டுள்ளது 'தீபம்'.

இலக்கியப் பத்திரிகை என்ற தன்மையில் 'தீபம்' இலக்கிய உலகம் பற்றி பல்வேறு கோணங்களிலும் கூரிய பார்வையைச் செலுத்தி ஆழ்ந்த கருத்துக்களை ஒலிபரப்பியது. ஆண்டுதோறும் ஆகஸ்டில் சுதந்திரதினம் பற்றியும், செப்டம்பரில் பாரதி விழா குறித்தும், அக்டோபரில் காந்திஜீ பற்றியும் வித்தியாசமான - ஒவ்வொரு வருடமும் புதிய சிந்தனை ஒளியுடன் - தலையங்கம் வரைந்தார் நா.

பா. ஊன்றி உணர்தற்குரிய உண்மைகளை அவற்றில் எடுத்துரைத் தார்.

'நமது சுதந்திரம்' பற்றி ஒரு தலையங்கம்

''பாரத நாடு சுதந்திரம் அடைந்த இந்தப் பல ஆண்டுகளில் சில துறைகளில் நாம் வளர்ந்திருக்கிறோம். சில துறைகளில் தளர்ந்துமி ருக்கிறோம். நமது வளர்ச்சி பெருகவும், தளர்ச்சி குறையவும் தேச பக்தியோடும் பொறுப்புணர்ச்சியோடும் மேலும் மேலும் பாடுபட வேண்டும். விடுதலை, சுதந்திரம் என்ற பதங்களில் அர்த்தத்தை முதலில் நாம் மக்களுக்குச் சரியான முறையில் உணர்த்த வேண்டும். அடிமைத் தனத்திலிருந்து விடுதலை (Freedom From Slavery) வேண் டினோம் - கிடைத்தது. சுதந்திரம் அடைந்த நாட்டில் ஒவ்வொருவ ரும் பொறுப்பிலிருந்தோ, கடமையிலிருந்தோ விடுதலை (Freedom From Responsibility) வேண்டுவது இன்று வழக்கமாகி வருகிறது. அடிமைத் தனத்திலிருந்து தான் சுதந்திரம் அடையலாமே ஒழியப் பொறுப்பிலிருந்தும் கடமையிலிருந்தும் சுதந்திரமடைய முயலக்கூ டாது. பாரதபூமியின் ஒவ்வோர் குடிமகனும் சுதந்திர நன்னாளில் நினைவுகூர வேண்டிய உண்மை இது.

(தீபம் - ஆகஸ்டு 1969)

பாரதி பற்றிய ஒரு தலையங்கம் உரிய முறையில் பாரதிக்குப் புகழாரம் சூட்டியுள்ளது.

''காலமும் பழமையாக்க முடியாத மகாகவி பாரதியை எத் துணை முறை நினைத்தாலும் நமக்குப் பெருமையாயிருக்கிறது. அகில இந்தியாவுக்கும் மிகப் பெரிய தேசிய மகாகவி பாரதி ஒரு வனே. தாகூர் கங்கையை மட்டுமே பாடியிருக்கிறார். பாரதியோ கங்கையையும் காவிரியையும் இணைக்கும் சிந்தனையை அன்றே பாடி வைத்திருக்கிறான்.

நேற்றும், இன்றும், நாளையும் பாரதியினளவு பரந்த தேசிய மனப்பான்மை உள்ள வேறு ஒரு கவிஞனை இந்த நாட்டில் பார்க்க முடியவில்லை. இந்தியர்கள் 'இதோ ஒரு மகாகவி' என்று பெருமை யோடு தலை நிமிர்ந்து சொல்லிக்கொள்வதற்குப் பாரதி ஒருவன்

இருக்கிறான். பாரதி தமிழின் அழியாத கவிச்செல்வம். ஆனால் தமிழகத்தைத் தவிர வேறு மாநிலங்களில் பாரதி அதிகம் பரவ வில்லை.

தன்னுடைய ஆவேசமும், கருத்துச் செறிவும் மிக்க கவிதைக ளால் இமயத்தையும் குமரியையும் இணைத்த கவிஞனை இந்தியா முழுவதும் கொண்டாட வேண்டும். தேசம் சுதந்திரம் அடைவதற்கு முன்பே தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்திப் பாடிவைத்து விட் டுப்போன இந்திய மகாகவி பாரதி ஒருவனே. பாரதியைக் கொண்டா டும் போது பல்லாயிரம் காலத்து இந்தியக் கவிதைப் பண்பாட்டையே நாம் கொண்டாடுகிறோம். பாரதியைக் கொண்டாடும் போது, ஆவே சமாகத் தமிழுரிமை பேசிய ஓர் அற்புதக் கவிஞனைக் கொண்டாடுகி றோம்.

இந்தியாவின் ஆன்மீக - தேசியக்குரல் பாரதி என்கிற ஒரு தமிழனின் நாவிலிருந்து தான் எவ்வளவு அழுத்தமாக ஒலித்திருக்கி றது! காலத்தின் தேவைக்குக் கனிந்து வந்து பயன்பட்டுக் காலங்கடந் தும் வாழும் மகாகவி பாரதி. தம்முடைய வறட்டுக் கூப்பாடுகளால் அரசியல்வாதிகள் இன்று இணைக்கமுடியாத இந்திய ஒருமைப்பாட் டைப் பல்லாண்டுகளுக்கு முன் தன்னுடைய தமிழ்ச் சொற்களால் இணைத்துக் காட்டியவன் பாரதி.'' (செப்டம்பர் 1968)

மகாத்மா காந்தியிடமும், காந்தி வழிகளிலும் ஆழ்ந்த பற்றுதல் கொண்டிருந்தவர் நா. பா. காந்தியின் கொள்கைகளைப் பின் பற்றிய வர். அவருக்கு மகாத்மாவிடம் இருந்த மதிப்பும் மரியாதையும் நா. பா வின் எழுத்துக்களில் ஒளி வீசின. காந்தியடிகள் பிறந்த நாளின் போது எழுதப்பட்ட தீபம் தலையங்கங்களிலும் அவற்றை உணர லாம்.

''சத்தியம், கொல்லாமை, ஒப்புரவறிதல் போன்ற மிக உயர்ந்த குணங்களை நம் காலத்தில் நாமறிய வாழ்ந்து காட்டிய உத்தமர் காந்தியடிகள். தேசத்தின் நலனுக்காகத் தம் நலங்கள் எல்லாவற்றை யும் தியாகம் செய்த பெரியவர் அவர். தொண்டினால் உயர்ந்த தூயவர் அவர்.

இன்றோ தம் நலங்களுக்காகத் தேசத்தையே தியாகம் செய்ய வும் துணிகிற பதவிப்பித்தர்களை மேலிருந்து கீழ்வரை எங்கும்

எதிலும் காண்கிறோம். காந்தியடிகள் எவ்வளவு பெரியவர் என்பதை நாம் அன்று உணர்ந்ததை விட இன்று தான் மிக நன்கு உணர முடிகிறது. உணர்கிறோம். பெருமூச்சு விடுகிறோம். தேசம் முழுவதும் தேடினாலும் மிக உன்னதமான ஒளி எதுவும் இன்று எந்த மூலையிலிருந்தும் நமக்குத் தெரியவில்லை. காந்தியடிகள் பாதம் மிதித்த மண் என்ற ஒரே தகுதி தான் இன்றைய இந்தியாவுக்கு மீதம் இருக்கிறது.

அடிகளைப் போல் பதவிகளில் நாட்டமின்றிப் பாமர இந்தியர்களின் வாழ்வு ஒளி பெற ஒற்றைத் துணி உடுத்து எளிய கோலத்தோடு தொண்டு செய்ய முன்வரும் சமுதாய மகாமுனிவர் எவரும் இன்று நம் முன் இல்லை. ஏழைகளைத் துன்புறுத்தி இலஞ்சம் வாங்கி, மாடமாளிகை கட்டி வாழும் சுக போகியான ஒவ்வொருவனையும் பார்க்கும் போது காந்தி இன்றிருந்தால் கண்ணீர் சிந்துவார் என்பதை உணர முடிகிறது. ஒவ்வோர் அடிகள் பிறந்த நாள் வரும் போதும் இந்தக் கண்ணீரையே நாமும் சிந்துகிறோம். நம்முடைய கண்ணீர் வீண் போகாது.'' (அக்டோபர் 1970)

''காந்தீயத் தத்துவத்தின் அடிப்படை இந்தியப் பண்பாட்டின் வழிவழி வந்த தன்மைகளைப் பலமாக் கொண்டிருப்பது.

மிருக பலத்தினால் எந்த மதத்தையும் காப்பாற்றிவிட முடியாது என்று காந்தீயம் நம்பியது. காந்தீயம் என்பது வேறெந்த அரசியல் தத்துவங்களையும் போல் இரவல் வாங்கப்பட்ட வெளிநாட்டுத் தூண்டுதலை உடையதல்ல.

இந்த மண்ணிலேயே பிறந்து, இந்த மண்ணின் அசல் தேசீயத் தன்மைகளை உடைய ஒரே தத்துவம் காந்தீயம் தான் என்று தெரிகிறது. காந்தியடிகளுக்கு முன்பும் இந்த நாட்டிலே சமுதாய, சமய, ஆன்மீக சித்தாந்தங்கள் உண்டு. ஆனால் இந்த நாட்டின் முதல் அரசியல் சித்தாந்தம் காந்தி அடிகளால் தான் பிறந்தது. இந்த நாட்டின் கருணைமயமான முதல் அரசில் மதம் காந்தீயம் என்ற பெயரில் தான் உண்டாயிற்று.''

(காந்தீயம் என்னும் பாரம்பரியம் - அக்டோபர் 1972)

திருவள்ளுவர் திருவிழா கொண்டாடப்பட்ட போது, நா. பா எழுதிய தலையங்கம் மிக முக்கியமானது ஆகும்.

''திருவள்ளுவரின் இரண்டாயிரம் ஆண்டுநிறைவு விழாவைத் தமிழகம் எங்கும் கொண்டாட ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள். ஆண்டுகள் எவ்வளவு ஆகியிருந்தாலும் திருவள்ளுவர் தமிழர் சமுதாயத்தின் அறிவு நிதியாகத் திகழ்பவர். திருக்குறள் தமிழில் உள்ள அற நூல்களில் தலை சிறந்தது. விழா எடுத்து, ஊர்வலம் நடத்தி, சொற்பொழிவுகள் செய்து கொண்டாடுவது ஒருபுறமிருக்க, வள்ளுவர் கூறிய அன்பு, அறம், இரக்கம், ஒழுக்கம், பண்பு, பயனில சொல்லாமை ஆகிய எக்காலத்துக்கும் நல்லவற்றைக் கடைப்பிடிக்க முயல்வதே குறளாசிரியருக்குச் செய்யும் நன்றியாகும். செய்ந்நன்றியை அறமாகக் கூறிய வள்ளுவருக்கு நாம் செய்ய வேண்டிய நன்றி அவர் கூறிய அறவாழ்வையும் ஒழுக்க நெறியையும் போற்றி மேற்கொள்வதேயாகும்.

பல ஆண்டுகளுக்கு முன் காந்தியடிகள் இந்நாட்டில் திருவள்ளுவருக்கு அப்படி வாழ்ந்து காட்டுவதன் மூலம் நன்றி செலுத்தினார். பெரியோர்களை அவர்கள் கூறிய கருத்தின்படி வாழாமல் - வெறும் சொற்களால் துதிப்பது மட்டும் - முறையான போற்றுதலாகாது.

திருவள்ளுவர் விழா வருவதை ஒட்டி இதே ஆண்டில் காந்தியடிகள் நூற்றாண்டு விழாவும் வருகிறது. வாழ்வுநூல் செய்த உலகப் பொதுமறையாசிரியரின் பெருவிழாவும் வாழ்ந்து காட்டிய நம் தேசத் தந்தையின் நூற்றாண்டு விழாவும் ஒரே ஆண்டில் வருவது மிகமிகப் பொருத்தமாயிருக்கிறது. திருவள்ளுவர் கடைப்பிடிக்க வேண்டிய நூலின் ஆசிரியர். காந்தியடிகள் அப்படிக் கடைப்பிடித்து வாழ்ந்த மாமேதை. இந்த இரண்டு மாமேதைகளின் விழாவும் வருகிற இவ்வாண்டிலிருந்து, நாம் பயனில செய்வதையும் சொல்வதையும் விடுத்து நல்வாழ்வு வாழப் பரிதிக்ஞை எடுக்க வேண்டும். அதுவே அவர்களுக்கு நாம் செய்யும் நன்றியாகும் என்பதை மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூற விரும்புகிறோம்.'' (பிப்ரவரி 1969)

தமிழ் மொழிக்குப் புதுமைகள் சேர்ப்பது பற்றியும், எழுத்தாளர்கள் கடமை குறித்தும், படைப்பிலக்கியம் எவ்வாறு அமைய வேண்

டும் என்றும் நா. பா சிந்தனை வளர்ந்திருக்கிறார், பல தலையங்கங்களில். அவை அவருடைய இலக்கிய அக்கறையையும் ஆழ்ந்த சிந்தனையையும் வெளிப்படுத்துகின்றன. அவருடைய சமூக நல உணர்வையும், நாட்டின் நலம் விரும்பும் பண்பையும் எடுத்துக்காட்டுகின்றன. 'காலத்தை பிரதிபலிக்கும் கதைகள்' என்ற தலையங்கத்தை விசேஷமாகக் குறிப்பிடவேண்டும்.

"இந்திய மொழிகளில் சமஸ்கிருத்தைப் போலவே பழமையான மொழி தமிழ். நீண்ட பாரம்பரியமும் இலக்கணச் செம்மையும், இலக்கியச் செழுமையும் உடைய தமிழ் மொழியில் இவ்வளவு பழம் பெருமைகள் இருந்தும் புதுப் பெருமைகள் எவையும் விரைந்து வளராமல் இருக்கக் காரணம் என்ன என்பது அடிக்கடி கேட்கப்படும் கேள்வி. புதுமை இலக்கியத் துறையில் தமிழில் ஏன் விரைவான வளர்ச்சியும் புதுப்புது முயற்சியும் ஏற்படவோ அங்கீகரிக்கப்படவோ இல்லை? மிகப் பெரிய பழமையே இதற்குக் காரணமா? அல்லது மொழி வல்லுநர்களிடம் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையின்மை காரணமா?

தற்கால நடைமுறையை அனுசரித்த எழுத்துக்கள் தமிழில் மிகவும் குறைவாகவே எழுதப்படுகின்றன. சமூக, அரசியல், பொருளாதார பாதிப்புகளால் தனிமனிதனும், மத்தியதர வர்க்கமும், மத்தியதர வர்க்கத்துக்கும் கீழேயுள்ள ஏழைகளும் எப்படி எப்படி எல்லாம் அலைக்கழிக்கப்படுகிறார்கள் என்பதைப் பொறுத்த கற்பனைகளும் கதைகளும் அதிகம் வர வேண்டும்.

அரசியலால் பாதிக்கப்படாத முனைகளே இன்று இல்லை என்றாலும், தமிழ் எழுத்தாளர்களில் பலர் அதனோடு நேரடியாகவோ மறைமுகமாகவோ, தொடர்புபடும்கதைகளையும் நாவல்களையும், எழுதத் தயங்குகிறார்கள். அப்படி எழுதுகிறவர்களையும், எழுத முயல்கிறவர்களையும் பயத்தோடும் பரிதாபத்தோடும் நோக்குகிறார்கள். இது ஏன் என்று தெரியவில்லை. கலையைப் படைப்பதற்கும் இரசிப்பதற்கும் நிர்ப்பயமான மனநிலை வேண்டும். அடிமை நாட்டில் கலைவளர்ச்சி இல்லாமல் போவதற்கு இதுவே காரணம்.

தமிழ் நாட்டிலோ, சுதந்திர இந்தியாவில் ஓர் அங்கமாக இருந்தும், இந்தக் குறிப்பிட்ட கோணத்தில் ஒருவித அடிமை மனப்பான்மை தான் இன்னும் நிலவி வருகிறது. காலத்தைப் பிரதிபலிக்கும் கதைகள் தமிழில் நிறைய வரவேண்டும். நிர்ப்பயமான, சமூகப்ரக்ஞையுள்ள, கலைப் படைப்பாளிகள் தான் இதைச் செய்ய முடியும். அத்தகைய படைப்பாளிகள் தமிழ் மொழியில் விரல் விட்டு எண்ணத் தக்கவர்கள் தான் இருக்கிறார்கள். அவர்கள் தொகை பெருகவும், அவர்கள் படைக்கும் காலத்தையும் சூழ்நிலையையும் பிரதிபலிக்கும் சமூகப்ரக்ஞையுள்ள இலக்கியங்கள் பெருகவும் ஏற்ற கனிவு இங்கே வரவேண்டும் என்று தீபம் ஆசைப்படுகிறது. நினைவூட்டுகிறது.'' (ஜூன் 1973)

எழுத்தாளர்களுக்கு சமூகப்பிரக்ஞையோடு பரந்த நாட்டுப்பற்றும் விசால இந்திய உணர்வும் அவசியம் தேவை என்பதை ஒரு தலையங்கம் வலியுறுத்தியது.

''இந்தியாவில் இருக்கிறோம் - இந்தியர்களாக இருக்கிறோம் - இந்திய இலக்கியத்தின் அங்கமாக இயங்குகிறோம் என்றெண்ணுவதே நம் நாட்டுப்படைப்பிலக்கிய கர்த்தாக்கள் நாட்டுக்குச் செய்யும் ஒருமைப்பாட்டுப் பணி. முற்போக்கான மனப்பான்மையும், யதார்த்த இலக்கியப் படைப்பாற்றலும் மிக்க எல்லா இந்திய மொழியினரும் எல்லாப் பகுதிகளிலும் புகழ் பெற வேண்டியது அவசியம். தமிழின் பெருமையை மற்றவர்களுக்கு உணர்த்துவோம். மற்றவர்கள் பெருமையை நாம் உணர்வோம்.

நமது மாநிலம் தமிழகம் என்றாலும் நமது நாடு இந்தியா என்ற உணர்வே நம்முள் அதிகம் வளர வேண்டியது. தமிழர், தெலுங்கர், கேரளர், கன்னடர் முதலிய அனைவருமே அடங்கிய ஒரு பதம் இந்தியா. இந்தியா என்ற உணர்வு பெரியது. பரந்தது. அதைக்காத்து வளர்க்க வேண்டும். நாட்டுக்குப் பல சோதனைகள் நிறைந்த இந்தக் காலத்தில் இது மிகவும் முக்கியம் என்பது நம் கருத்து.'' (ஜூன் 1974)

மே தினச் சிந்தனையாக 1975 ல் நா.பா எழுதிய தலையங்கம் என்றும் எழுத்தாளர்களால் நினைவில் நிறுத்தப்பட வேண்டிய நற்கருத்துக்களை கொண்டுள்ளது. 'விலகி நிற்பதில் பயனில்லை' என்பது அதன் தலைப்பு.

''இந்திய இலக்கியப் படைப்பாளிகளின் அணியில் கேரள, வங்க எழுத்தாளர்களைத் தனியே பிரிப்பது வாழ்க்கையிலிருந்து வெகுதூரம் விலகி நிற்காத அவர்களின் தன்மையே ஆகும்.

நாட்டின் பொதுவாழ்வில் லஞ்சம், ஊழல், பதவிப்பித்து, அதி கார துஷ்பிரயோகம், உழைப்பில் சோர்வு ஆகியவற்றைத் தட்டிக் கேட்கத் துணியும் இலக்கிய ஆண்மையும் தேவைப்படுகிற காலம் இது. தமிழ்நாட்டுச் சூழ்நிலையோ முற்றிலும் வேறானது. எதிலும் விலகி நின்று பாதுகாப்பான எல்லைக்குத் தங்களை உயர்த்திக் கொண்டு கற்பனை செய்வதே வழக்கம் என்று ஆகி இருக்கிறது இங்கே.

நம்முடைய சமகாலத்திலும், பொதுவாழ்விலும் தொடர்பு படுத் திக் கொள்ளாத எழுத்தால் மக்களுக்கு என்ன பயன்? ஆகவே இலக்கியப் படைப்பாளிகளுக்கும் ஒரு involvement வேண்டும். தந் தக் கோபுர மனப்பான்மையின் காலம் முடிந்து விட்டது. சமகாலப்பி ரக்ஞையும், சமகாலப் பிரச்னைகளும், சமகால உணர்வுகளும் இல் லாத வெற்றுக் கற்பனை எழுத்தை வண்டி வண்டியாக வளர்ப்பதில் ஒரு பயனுமில்லை. Isolation இனிமேல் பயன் தராது என்பதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். உழைப்பையும் தன்னம்பிக்கையையும் நினைவூட்டும் நாளாகிய இந்த மேதின மாதத் தில், விலகி நிற்காமல் இணைந்து ஈடுபட்டு இலக்கியம் படைக்கும் பணிக்கு உறுதி எடுத்துக் கொள்வோமாக. இந்த உறுதி தமிழ் இலக் கிய உலகுக்கு ஒரு புதிய பாதையையும் பார்வையையும் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை.'' (மே 1975)

எழுத்தாளர்களுக்கு சமூகப் பொறுப்புணர்வு கட்டாயம் தேவை என்று அழுத்திக் கூறியது ஒரு தலையங்கம்.

''வாழ்க்கையில் பலருக்கு அதிருப்தியும் கசப்புணர்ச்சியும் பேராசையும் ஏற்படுவது சகஜநிலையாகிவிட்டது. பொதுவாழ்வில் லஞ்சமும் ஊழலும் பெருகிவிட்டன. இப்படிச் சமூகம் எங்கும் தோன்றி விட்ட நோய்களைத் தீர்க்க எழுத்தாளர்களும் கவிஞர்களும் இலக்கிய ஆசிரியர்களும் மற்றவர்களை விட மிகவும் அவசரமாக வும் அதிகமாகவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

பேதங்களை நீக்கி ஒற்றுமையை வளர்க்கவும், பேராசையை நீக்கித் திருப்தியைக் கற்றுக் கொடுக்கவும் ஏற்ற நல்லுணர்வுகளைச் சக்தி வாய்ந்த எழுத்தின் மூலம் உண்டாக்கி நாம் பாடுபட வேண்டும். பொழுதுபோக்கு இலக்கியம் படைக்கவும், கொச்சையான பாலுணர்வு வக்கரிப்புகளை வரைந்து காட்டவும், ஏதாவது அசிங்கங்களை அரை குறையான கலைத் திறமையுடனே எழுதிக் காட்டவும் இது தருணமில்லை. தேசம் ஆபத்திலிருக்கிறது. மக்கள் அபாய நிலையிலிருக்கிறார்கள். துயரப்படுவோர் தொகை எங்கும் அதிக அளவில் பெருகிவிட்டது. வாழ்க்கை சாதாரண உத்தரவாதமும் அற்றதாகி நலிந்து விட்டது. பரிதவிப்பவர்களுக்கு நடுவே போய்ப் பாண்டு வாத்தியம் முழங்குவது போல் தாறுமாறாக எதையாவது செய்வதால் பயனில்லை.

இந்திய சமூகத்தில் நம்பிக்கையை, உழைக்கும் திறனை, பரஸ்பரம் பரிந்துணர்வை, மொழி வெறி இன வெறியற்ற நட்புறவை, சத்திய வேட்கையை வளர்க்கும் இனிய நல்லுறவுகளைப் பெருக்கத் தமிழ் எழுத்தாளர்கள் முனைந்து பாடுபட வேண்டும்.'' ('நாட்டின் நிலையும் எழுத்தாளர் கடமையும்' - பிப்ரவரி 1974)

நாட்டில் பெருகிவரும் 'அபாயகரமான போக்கு' பற்றி எச்சரித்து, எழுத்தாளர்களின் கடமையை உணர்த்திய ஒரு தலையங்கமும் கவனிப்புக்கு உரியதாகும்.

''அண்மைக் காலமாக நாட்டில் வன்முறைகள், ஆட்களைக் கடத்திச் சென்று பணயத் தொகை கேட்டல், கொலை, கொள்ளை, வழிப்பறி, கற்பழித்தல் ஆகிய நிகழ்ச்சிகள் மிகுதியாகி வருகின்றன. இதற்குக் காரணம் அல்லது தூண்டுதல் என்ன?

மேலை நாட்டுக் குற்ற இலக்கியங்களை ('க்ரைம் லிட்டரேச்சர்') படித்த விறுவிறுப்பில் - மன வளர்ச்சியோ விஞ்ஞான வளர்ச்சியோ அந்த அளவு ஏற்படாத, வேலையில்லாதோர் அதிகமுள்ள நம் நாட்டில் எழுதப்படுகிற அதே பாணிக்கதைகள் - அதே பாணியில் எடுக்கப்படும் அரை வேக்காட்டுத் திரைப்படங்கள் இவையே பெருமளவு காரணம் என்பது என் கருத்து. பாங்க் கொள்ளையைப் பற்றிய ஒரு நாவல் அல்லது படத்தைப் படிக்கிற - பார்க்கிற வேலை கிடைக்காத

நாலு இளைஞர்கள் உடனே அதே போல் ஒரு கொள்ளைக்குச் சரியா கவோ தவறாகவோ திட்டமிடுகிறார்கள். கற்பழிப்பு, கடத்தல் எல்லாமே இப்படித்தான்.

ஒரு காலத்தில் இந்திய இலக்கியம் என்பது மனத்தை மலரச் செய்து உயர்த்தி மணக்கவைத்தது. கல்லாக இறுக்கிக் கடுமையாக்கவோ கொடுமையாக்கவோ இல்லை. முக்கால் வாசித் தீமைகளை எழுத்திலிருந்தும் திரைப்படங்களிலிருந்தும் கற்கிற நிலைமை இன்று வேகமாக வளருகிறது. அபாயகரமான வேகத்தில் வளர்ந்து கொண்டிருக்கிறது. கவலைப்பட வேண்டிய விதத்தில் வளர்கிறது.

இது அபாயகரமான போக்கு, கருணை, பரோபகாரம், உழைப்பின் பெருமை, சத்திய ஆவேசம், நல்லெண்ணம், நல்லுணர்வு - இவை இலக்கியத்தின், நாடகத்தின், திரைப்படத்தின் செய்திகளாக ('மெஸேஜ்') இரசிகன் மனத்தில் வந்து தங்கி எஞ்சி நிற்க வேண்டும். இன்று அப்படி எஞ்சி நிற்கும் விகிதாசாரமும் மிகமிகக் குறைவு.

பேராசை, அண்டிக் கெடுப்பது, நம்பிக்கை வறட்சி, சூதுவாது, காமம், ஏமாற்றல், பொறாமை, சோம்பல், அதிர்ஷ்டம் அடிக்காதா என்ற நப்பாசை, நல்லவன் முன்னேற மாட்டான் என்ற பயம் இவற்றையே இலக்கியமும் கலையும் உண்டாக்குமானால், அந்த மாதிரி இலக்கியமும் கலையும் காலரா மலேரியா மாதிரி மோசமான சமூக வியாதிகள். அவற்றை ஆரம்பத்திலேயே களைய வேண்டியது அவசியமாகும். நாட்டு நலன் விரும்பும் எல்லோருமே சிந்தித்துக் கவலையும் அக்கறையும் கொள்ள வேண்டிய விஷயமாகும் இது. இந்தத் தலையங்கம் சம்பிரதாயமாக இங்கு எழுதப்படவில்லை. ஒரு எஸ். ஓ. எஸ் மாதிரி அவசரக் கூவலாக எழுதப்படுகிறது.'' (செப்டம்பர் 1978)

இத்தகைய தலையங்கங்கள் 'தீபம்' தனித்தன்மையுடன் விளங்கிய இலக்கியப் பத்திரிகையாக வளர்ந்தது என்பதை சுட்டிக் காட்டும் சான்றுகளாகும். இவ்வாறு பல்வேறு பிரச்சினைகள் பற்றியும் சிந்தித்து நல்லெண்ணங்களையும் நல் உணர்வுகளையும் எழுத்தாளர்கள் வாசகர்களிடம் வளர்ப்பதற்கு 'தீபம்' அயராது உழைத்தது.

# 5. படைப்பிலக்கியப் பங்களிப்பு

இலக்கியப் பத்திரிகைகள் படைப்பிலக்கிய முயற்சிகளில் ஆர்வம் காட்டுவது இயல்பு.

படைப்பிலக்கியம் என்று சிறுகதை, கவிதை, நாவல் ஆகியவற்றில் தான் இலக்கியப் பத்திரிகைகள் பொதுவாக அக்கறை செலுத்துகின்றன. இலக்கியத்தின் இந்தத் துறைகளின் வளர்ச்சிக்கும் வளத்துக்கும், இலக்கியப் பத்திரிகைகள் என்று சொல்லிக் கொள்கிற பலவும் சரியான முறையில் பங்களிப்பு செய்திருக்கின்றன என்று கூற இயலாது. இலக்கியப் பத்திரிகை என்றால் சிறுகதைகள், கவிதைகள், பக்கங்கள் அதிகம் இருப்பின் தொடர்கதை ஆகிய அம்சங்கள் தேவை என்ற அளவிலேயே பெரும்பாலான பத்திரிகைகள் இவற்றையும் பிரசுரிக்கின்றன. ஆற்றல் நிறைந்த தேர்ந்த படைப்பாளிகளின் கலைத்தரமான எழுத்துக்களை, ஆழ்ந்த - கனமான - புதுமையான படைப்பு முயற்சிகளை வரவேற்று வெளியிடுகிற இதழ்கள் ஒரு சிலவே தோன்றியுள்ளன. அவை தேர்ச்சி பெற்ற மூத்த எழுத்தாளர்களின் எழுத்துக்களையும், ஆற்றலும் ஆர்வமும் மிகுந்த இளைய படைப்பாளிகளின் சிருஷ்டிகளையும், புதிதாக எழுதுகிற இளைஞர்களின் நயமும் தரமும் நிறைந்த எழுத்துக்களையும் விரும்பி ஏற்றுப் பிரசுரம் செய்கின்றன. இவை இயல்பாகவே இலக்கியம் வளரத் துணை புரிகின்றன. அதன் மூலம் இலக்கியத்தின் வளம் பெருக உதவுகின்றன.

'தீபம்' அத்தகைய பத்திரிகைகளில் குறிப்பிடத்தக்க ஒன்றாகத் திகழ்ந்தது. சிறுகதை, கவிதை, நாவல், ஆகியவற்றுக்கு மட்டுமல்லாது குறுநாவல், கட்டுரை எனும் இலக்கியப் பிரிவுகளுக்கும் கணிசமான பங்களிப்பு செய்துள்ளது 'தீபம்'. பழம் பெரும் எழுத்தாளர்கள், அதன் காலத்தில் புகழ் பெற்று விளங்கிய படைப்பாளிகள், புதிய இளைய படைப்பாளர்கள் எழுதத் தொடங்கி - நன்கு வளரக் கூடும் எனும் எதிர்ப்பார்ப்புக்கும் நம்பிக்கைக்கும் இடம் அளித்த - இளம் எழுத்தாளர்களின் சிறுகதை, கவிதை, தொடர்கதை, கட்டுரைகள்

ஆரம்பகாலம் முதல் இறுதி இதழ் வரை தீபத்துக்கு சிறப்பும் தரமும் சேர்த்திருக்கின்றன.

ஆசிரியர் நா. பார்த்தசாரதியே பன்முக ஆற்றல் பெற்ற படைப் பாளியாக இருந்ததனால், மிகுந்த கவனிப்பும் பாராட்டும் பெறும் விதத்தில் நாவல்கள், குறுநாவல்கள், கவிதைகள், சிந்தனைக் கட்டு ரைகள் முதலியன படைத்து நல்ல முறையில் இலக்கியப் பணியாற்று வதும் சாத்தியமாயிற்று.

**நாவல்கள்**

'தீபம்' இதழைத் தொடங்குவதற்கு முன்னரே நா. பா நல்ல நாவலாசிரியர் என்றும், சிறந்த சிறுகதை எழுத்தாளர் என்றும் வாசகர் களின் உள்ளத்தில் இடம் பெற்றிருந்தார். குறிஞ்சிமலர், பொன் விலங்கு ஆகிய சமூக நாவல்களும், பாண்டிமாதேவி, மணிபல்லவம் எனும் சரித்திர நாவல்களும் அவருக்குப் பெரும் புகழ் பெற்றுத் தந்திருந்தன. அவருடைய நாவல் படைக்கும் திறமைக்கும் 'தீபம்' நல்ல களம் அமைத்துக் கொடுத்தது. நா. பா என்ற பெயரிலும், மணிவண்ணன் என்ற புனை பெயரிலும் அவருடைய நாவல்கள் தீபத்தில் தொடர்ந்து பிரசுரம் பெற்றுக் கொண்டிருந்தன.

'நெற்றிக் கண்' என்ற சமூக நாவல் தீபம் இரண்டாவது இதழிலி ருந்து தொடர்ந்தது. அது வளர்ந்து வந்த போதே. வாசகர்களின் அன்பான ஆதரவை ஈர்ப்பதற்காக 'கபாடபுரம்' என்ற சரித்திர நாவலை நா. பா எட்டாவது இதழ் முதல் எழுதலானார். இரண்டும் நெடுங்காலமும் தொடர்ந்து வெளி வந்தன.

தற்கால நடைமுறையை அனுசரித்து, காலத்தை பிரதிபலிக்கும் கதைகள் எழுதப்பட வேண்டும்; சமூகத்தில் அரசியலிலும் பல்வேறு துறைகளிலும் காணப்படுகிற கோளாறுகளையும் குறைபாடுகளை யும், சிதைவுகளையும் சீரழிவுகளையும் எடுத்துச் சொல்கிற - உயரிய நோக்கங்களையும் கொள்கைகளையும் வலியுறுத்துகிற-கதைகள் பல வடிவங்களிலும் எழுதப்பட வேண்டும் என்ற கருத்தை நா. பா கொண்டிருந்தார். நிர்ப்பயமான, சமூகப்ரக்ஞையுள்ள, படைப்பாளி கள் தான் இதைச் செய்ய முடியும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். அவரே அந்தப் பண்புகளைப் பெற்றிருந்ததனால், துணிச்சலோடு

நெஞ்சக்கனல், செய்திகள், பொய்ம்முகங்கள், ஆசாரக்கள்ளர்கள் போன்ற நாவல்களை அவரால் எழுத முடிந்தது. அவை தீபத்தில் தொடர்கதைகளால் வந்தன.

இந்திய விடுதலைப் போராட்ட வரலாற்றையும், அதில் ஈடு பட்ட ஒரு இலட்சியவாதியின் வாழ்க்கையையும் ஆதாரமாகக் கொண்டு, 'ஆத்மாவின் ராகங்கள்' என்ற சிறந்த நாவலை நா. பா எழுதினார். [illegible]5லில் அது 'வாசகர் வட்டம்' வெளியீடு ஆக பிரசுரம் பெற்றது. பின்னர் தீபத்தில் தொடர்கதையாகவும் வெளியிடப்பட்டது.

பிற்காலத்தில் புத்தகமாகப் பிரசுரம் பெற்று, எழுதியவர்களுக்கும் நாவல் இலக்கியத்துக்கும் பெருமை சேர்த்த நல்ல படைப்புகள் பல தீபத்தில் தொடர் கதைகளாக வெளிவந்தவையாகும். அசோக மித்திரனின் 'கரைந்த நிழல்கள்', ஆதவன் எழுதிய 'காகித மலர்கள்', இந்திரா பார்த்தசாரதியின் 'தந்திர பூமி', நாஞ்சில் நாடனின் 'மாமிசப் படைப்பு', நீல. பத்மநாபன் எழுதிய 'தீ-தீ' ஆகியவை இத்தன்மையன.

ஆர். சூடாமணி நாவல் 'தீயினில் தூசு', தி. சா. ராஜு வின் 'காளியின் கருணை', 'இசைக்க மறந்த பாடல்', விட்டல் ராவின் 'வெப்பக் காற்று', தேவகோட்டை வா. மூர்த்தியின் 'பிழைகள்,' 'ஜொலிக்கும் வைரங்கள்', 'புளிக்கும் திராட்சைகள்', மலர் மன்னன் எழுதிய 'மலையிலிருந்து வந்தவன்', உஷா மணியன் எழுதிய 'திருப்பு முனை' ஆகியனவும் தீபத்தில் தொடராக வெளி வந்த நாவல்கள் ஆகும்.

புதிதாக எழுத அரம்பித்திருந்த மோகனன் என்ற எழுத்தாளரின் 'அக்கினிக்குஞ்சு' எனும் நாவலையும் 'தீபம்' தொடர்கதையாக வெளியிட்டது.

இவை தவிர, குஜராத்தி, வங்க, மலையாள மொழி நாவல்களின் தமிழாக்கம்கள் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டன. அனந்த கோபால் செவடே எழுதிய 'இருளின் கீதம்' (தமிழில் - சௌந்தரா), சிவகுமார் ஜோஷியின் 'பொன்னிழல்' (சு.கிருஷ்ணமூர்த்தி மொழிபெயர்த்தது), பாரப்புரத்து நாவல் 'தூண்டில் புழு' (தமிழ்: ஆசி), மலையாற்

றூர் இராமகிருஷ்ணன் எழுதிய 'ஐந்து செண்ட் நிலம்', 'சல்லிவேர்கள்' (தமிழாக்கம்: குறிஞ்சி வேலன்) ஆகியவற்றையும் 'தீபம்' வெளியிட்டிருக்கிறது.

## குறுநாவல்

குறுநாவல் எனும் இலக்கியப் பிரிவுக்கும் தீபம் ஆற்றியுள்ள பணி போற்றப்பட வேண்டியது ஆகும். முதல் இதழிலிருந்து இறுதிக் காலம் வரை, இதழ் தோறும் ஒரு நல்ல குறுநாவல் தீபத்தில் இடம் பெற்றுள்ளது. தமிழின் சிறந்த படைப்பாளிகளின் அருமையான குறு நாவல்களையும், இதர இந்திய மொழிகளின் நல்ல படைப்புகளையும் தீபம் தந்திருக்கிறது.

தீபம் முதலாவது இதழிலேயே நா. பா., மணிவண்ணன் என்ற பெயரில் 'பிரயாணம்' எனும் குறுநாவலை எழுதினார். பின்னர், அவ்வப்போது, பொன்முடி என்ற பெயரில் அற்புதமான குறுநாவல் கள் பலவற்றை அவர் எழுதியுள்ளார். கங்கை இன்னும் வற்றிவிட வில்லை, நாற்பது கோடி ஏழைகள், டிப்ளமேட், தேவதைகளும் சொற்களும் குறிப்பிடத்தகுந்தவையாகும். நா. பா. என்ற பெயரி லேயே 'ஊற்றுக்கண்' என்பதை எழுதியிருக்கிறார். லா.ச. ராமமிர்தம் எழுதிய 'த்வனி', 'இன்னும் சில நாட்கள்', 'விழா', வல்லிக்கண்ண னின் விளையாட்டுப் பெண், மன்னிக்கத் தெரியாதவர், ஹீரோ, நீ. பத்மநாபனின் மின் உலகம், யாத்திரை, ஆதவனின், 'சிறகுகள்', 'இரவுக்கு முன் வருவது மாலை' ஆகியவை விசேஷமானவை.

ராஜம் கிருஷ்ணன், ஆர். சூடாமணி, இந்திரா பார்த்தசாரதி, கு. அழகிரிசாமி, மகரிஷி, சார்வாகன், தி.சா. ராஜு, எஸ். லட்சுமி சுப்பிரமணியன், பீஷ்மன், தாமரை மணாளன் முதலியோரது குறுநா வல்களும் வந்துள்ளன.

எம்.டி. வாசுதேவன் நாயரின் 'இருளில் ஓர் இதயம்', உஷா பிரியம்வதா இந்தியில் எழுதியவை, சுவ்ருத சக்கரவர்த்தி, (வங்கம்), ஸ்ரீமதி ஷிவானி, மன்னு பண்டாரி என்று பலரால் பல்வேறு மொழிக ளிலும் எழுதப்பட்ட குறுநாவல்கள் தமிழாக்கம் செய்யப்பெற்று மிகு தியாகவே அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. பல சமயங்களில் மூலக் கதை எந்த மொழியை சேர்ந்தது என்று குறிக்கப்படவில்லை. இது ஒரு குறையேயாகும்.

## சிறுகதை

தமிழில் சிறுகதை செழிப்பாக வளர்ந்துள்ள ஒரு துறை ஆகும். அதன் பல்வேறு வண்ணங்களும் வனப்புகளும் புலனாகக் கூடிய விதத்தில், தீபமும் முதலாவது இதழிலிருந்தே சிறப்பான சிறுகதை களை வெளியிட்டு ஒளி வீசியது.

தீபம் அதன் இருபத்து மூன்று வருட காலத்தில் எண்ணற்ற சிறுகதைகளை பிரசுரித்துள்ளது. ஒவ்வொரு இதழிலும் மூன்று கதைக ளுக்குக் குறையாமல் அது வெளியிட்டு வந்தது. சில சமயம் நாலைந்து கதைகள் கூட இடம் பெற்றதும் உண்டு.

சிறுகதைக் கலையில் சாதனைகளும் சோதனைகளும் புரிந்த விற்பன்னர்கள் முதல் புதிய இளைய எழுத்தாளர்கள் வரை, வெவ் வேறு தர எழுத்தாளர்களும் தங்கள் திறமையையும் ஆர்வத்தையும் ஈடுபடுத்தி விதம் விதமான கதைகளை எழுதியுள்ளனர். எத்தனை வகையான படைப்பு முயற்சிகள்! எத்தனை விதமான பார்வைகள்! எத்தகைய மனோ பாவங்கள்!

‘தீபம்’ சிறுகதைகள் தேர்ந்தெடுக்கப் பெற்று, பல தொகுதிகளாக வெளியிடப்பட்டால், தமிழ் சிறுகதைத்துறையின் செழுமையும், அதை அவ்வாறு செழிக்கச் செய்த படைப்பாளிகளின் திறமையும் நன்கு தெரிய வரும்.

நா. பா. இருந்த காலத்திலேயே அப்படி ஒரு முயற்சி மேற் கொள்ளப்பட்டது. கலைஞன் பதிப்பகம் மாசிலாமணி அவர்களின் ஒத்துழைப்புடன் ஒரு தொகுதியும் வெளியிடப்பட்டது. அதுவே ‘தீபம்’ சாதனையின் ஒரு சிறு அளவு கோலாக அமைந்து விளங்கி யது. அதைப் போல் மேலும் பல தொகுதிகள் தயாரிப்பதற்குத் தகுந்த சிறுகதைகளை ‘தீபம்’ இதழ்கள் தம்முள் கொண்டுள்ளன. ‘தீபம்’ இதழ் தொகுப்புகள் மதிப்பு மிக்க கலைக்களஞ்சியம் ஆகும். அவை சிறுகதைகளின் சுரங்கமும் கூட.

## கவிதைகள்

‘தீபம்’ ஆரம்பத்தில் சிறிது காலம் மரபுக் கவிதையை மட்டுமே ஆதரித்து வந்தது. தமிழ்ப் புலமையும் பயிற்சியும் பெற்றிருந்த நா.

பா. கருத்து நயமும் சொல் வளமும் கற்பனை அழகும் செறிந்த கவிதைகளை எழுதினார். ஒரு சந்தர்ப்பத்தில் கவிதையிலேயே ஒரு பக்கம் தலையங்கம் தீட்டியிருந்தார். மணிவண்ணன், பொன்முடி, நவநீதகவி, செங்குளம் வீரசிங்கக் கவிராயர் என்று பல புனைபெயர் கள் பூண்டு விதம் விதமான கவிதைகளை இயற்றியுள்ளார் அவர். செங்குளம் கவிராயராக அவர் நையாண்டிக் கவிதைகள் எழுதினார்.

ஒவ்வொரு இதழிலும் இரண்டு மூன்று கவிதைகள் இடம் பெற் றன. மல்லியம் ராஜகோபால், இளங்கம்பன், சாலை இளந்திரையன், மின்னூர் சீனிவாசன், நெல்லை ஆ. கணபதி, நா.சீ.வரதராஜன் (பீஷ் மன்), பா.அமிழ்தன் முதலியவர்கள் மரபு வழியில் கவிதைகள் படைத்துள்ளனர்.

புதுக்கவிதைக்கு ஆதரவு காட்டத் தொடங்கிய பிறகு, கவிதை கள் அதிகமாகவே இடம் பெற்றன. கடைசி சில வருடங்களில், இதழ் தோறும் கவிதைக்கு இடம் தாராளமாகத் தரப்பட்டுள்ளது.

ஆரம்ப வருடங்களில் ஜெயகாந்தன் பல கவிதைகள் எழுதியுள் ளார். சிறுகதை எழுத்தாளரான ஆர். சூடாமணியின் கவிதை கூட தீபத்தில் பிரசுரமாயிருக்கிறது. பூமணியின் கவிதைகளும் வெளி வந்தன.

புதுக்கவிதை எழுதுவதில் புக்ழ் பெற்ற பல கவிஞர்களின் கவி தைகளையும் தீபம் வெளியிட்டு வந்தது. ந. பிச்சமூர்த்தி, சுந்தர ராமசாமி, டி.கே. துரைஸ்வாமி (நகுலன்), ஞானக்கூத்தன், பரந்தா மன், வைத்தீஸ்வரன், கங்கை கொண்டான், சக்திக்கனல், புவியரசு, மு. மேத்தா, தமிழன்பன், மீரா - இப்படி அனைவரது கவிதைகளை யும் தீபம் பிரசுரித்தது. மு. மேத்தாவின் கவிதைகள் நல்ல கவனிப்பை யும் பாராட்டுதலையும் பெற்று வந்தன.

புதிதாக எழுதத் துவங்கிய கவிஞர்களின் கவிதைகளைத் 'தீபம்' அதிகமாகவே பிரசரித்து, மிகப் பலருக்கு ஆதரவு அளித்துக் கொண் டிருந்தது.

புதுக்கவிதை விஷயத்தில் ஒரு புதுமையைச் செய்துள்ளது தீபம். ராமாவதார் தியாகி என்ற இந்திக் கவிஞர் எழுதிய ஒரு கவிதையை இளம் பாரதி தமிழாக்கினார்.

அதை 'ஒரு புதிய அழைப்பு' என்ற தலைப்பில் தீபம் வெளியிட்டது.

கவிதை இது தான் -

வயல்களுக்குச் செல்லுங்கள்
அல்லது ஆலைகளுக்கு.
ஊர்வலங்களால், கோஷங்களால்,
ஆர்ப்பாட்டங்களால், பிரச்சாரங்களால்
மட்டும்
எந்த நாடும் உருப்பட்டதில்லை
மேடைகளைத் தகர்த்தெறியுங்கள்
வயல்களுக்கோ ஆலைகளுக்கோ
செல்லுங்கள்.
உடல் மூட ஆடைகள்
வயிற்றுக்குச் சோறு-
மேடைகள் நெய்வதில்லை
கோஷங்கள் விளைப்பதில்லை.
நாட்டு கௌரவம் நடுத்தெருவில்!
இதுவே தருணம் பணிபுரிய.
விரைந்து வா தோழனே பணிபுரிய.
வாய் கிழியப் பேசுவதால்
புதைந்த வரலாற்றைத் தோண்டுவதால்
மட்டும்
எந்த நாடும் உருப்பட்டதில்லை
மேடைகளைத் தகர்த்தெறியுங்கள்!
வயல்களுக்கோ ஆலைகளுக்கோ
செல்லுங்கள்.
இந்த நாட்டின் மானம் காக்க
வியர்வைப் பெருக்கே இன்றையத் தேவை.
தியாகம் என்றொரு தோட்டம் அமைத்தால்
மலரும் பூவின் மணமும் இணைந்தால்

வசந்தங்கள் தாமே வரும்.
இருண்ட வீடுகளில் தீபம் ஏற்ற
நலிந்த கண்களில் ஒளியினை ஏற்ற
வீதிகளெங்கும் வெளிச்சம் பரப்ப
வாழ்க்கை நடையில் திருப்பங்கள் தேவை.
சிந்தனைத் தோரணங்களால்
வறண்ட கருத்துரைகளால்
மட்டும்
எந்த நாடும் உருப்பட்டதில்லை.
மேடைகளைத் தகர்ந்தெறியுங்கள்.
வயல்களுக்கோ ஆலைகளுக்கோ
செல்லுங்கள்!

இக்கவிதை குறித்து நா. பா. ஒரு தலையங்கம் தீட்டினார் - 1975 ஜூன் இதழில்.

''இக்கவிதையின் உள்ளடக்கத்தில் உள்ள புதுமையையும் தீவிரத்தையும் கவனியுங்கள். உண்மையான புதுக்கவிதை என்பது இப்படி உள்ளடக்கத்தில் தீவிரமும் புதுமையும் உள்ளதாக இருக்க வேண்டும். உள்ளடக்கத்தில் உள்ள தற்காலத்தன்மை, கருத்து வளம், வேகம், ஆழம் ஆகியவையே நிலைத்து நிற்கும். விஷய கனமும், தீவிரமும், உள்ளடக்கப் புதுமையும் இல்லாவிட்டால் மரபுக் கவிதைகளின் மேல் ஏற்பட்ட சலிப்பு புதுக்கவிதைகளின் மேலும் ஏற்படலாம். இந்த அபாயம் தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று ஆகும்.''

# 6. கட்டுரை இலக்கியம்

கட்டுரை இலக்கியத்துக்கு 'தீபம்' ஆற்றியுள்ள பணி போற்றப் பட வேண்டியது ஆகும். 'தீபம்' போன்ற இலக்கிய இதழில் மற்ற இதழ்களை விட ஒரு கனம் தேவை' என்று உணர்ந்து நா. பா. ஆரம்பம் முதலே கட்டுரை இலக்கியத்திலும் விசேஷ கவனம் செலுத்தி வந்தார். விசால நோக்கில், பல்வேறு பொருள்கள் குறித்தும், சிந்தனை செறிந்த கட்டுரைகளை 'தீபம்' வெளியிட்டு வந்தது.

இலக்கியம், நாடகம், திரைப்படக்கலை, சமூகம், பொருளாதா ரம், நாட்டு நலம், முதலியன பற்றிய கட்டுரைகளை அனுபவமும் ஆற்றலும் பெற்றவர்கள் எழுதியுள்ளனர். இலக்கியத்தில் பழம் தமிழ் இலக்கியம், புதுமை இலக்கியம், பிற மொழிகளின் இலக்கியம், அயல் நாடுகளின் இலக்கியம் என்று பரந்த நோக்கில், ஆழ்ந்து கட்டுரைகள் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன.

நல்ல கட்டுரைகள் எழுதுவதில் தேர்ந்தவர் எனப் புகழ் பெற்றி ருந்த தி.ஜ.ர. (தி.ஜ.ரங்கநாதன்) அடிக்கடி கட்டுரை வழங்கினார். பத்திரிகை அனுபவம் மிகுந்த அவர் பெரும்பாலும் பத்திரகைத்துறை சம்பந்தப்பட்ட கட்டுரைகளையே எழுதினார். பத்திரிகைத் தொழில் ஒரு கண்ணோட்டம், நாலாவது தூண், விலையும் பொருளும் (பத்தி ரிகையின் விலையைப் பற்றியது), லட்சியப் பத்திரிகைகள், பத்திரி கைகளில் அவதூறு என்பன அவர் எழுதியுள்ள கட்டுரைகள் ஆகும். 'தமிழில் விஞ்ஞானம்' பற்றியும், 'வீரர் பண்பாடு' குறித்தும் அவர் எழுதியிருக்கிறார்.

அதே போல புத்தக வெளியீட்டுத்துறையில் மிகுந்த அனுபவம் பெற்ற கண. முத்தையா பயனுள்ள சிந்தனைகளை கட்டுரைகளாக வரைந்தார். புத்தகத் தொழிலும் அதன் எதிர்காலமும், புத்தகத் தொழி லும் காகிதப் பஞ்சமும், இந்தியாவில் புத்தக வெளியீடு ஆகியவை அவர் எழுதிய கட்டுரைகள் ஆகும். இவை தவிர, இந்திய சுதந்திரப் போரில் நேதாஜியின் பங்கு, விடுதலையும் முன்னேற்றமும், இலக் கிய வளர்ச்சி என்ற தலைப்புகளிலும் அவர் தனது எண்ணங்களை பதிவு செய்திருக்கிறார்.

நாவல் குறித்து ப. கோதண்டராமன் பல கட்டுரைகள் எழுதியுள் ளார். நாவல் ஒரு கலை, நவீனங்கள் பலவகை, நாவலின் கதையும் கதைக்கருவும் என்று பல தன்மைகளில் அவர் சிந்தனைகளை வெளி

யிட்டிருக்கிறார். தமிழ்நாவல் - சில அடிப்படைக் கருத்துக்கள், ஆர் கே. நாராயணன் நாவல்கள், தமிழ் நாவலின் தோற்றம், நாவல் நூற்றாண்டு விழா, தமிழ் நாவலும் பெண்கள் பங்கும், தெலுங்கு நாவல் இலக்கியம் என்று பல பார்வைகள், வெவ்வேறு எழுத்தாளர்க ளால் பல்வேறு சந்தர்ப்பங்களில் எழுதப்பட்டுள்ளன.

'கணையாழி' ஆசிரியர் கி. கஸ்தூரிரங்கன் விமர்சனப் பாங்கில், பலவிதப் பிரச்சினைகள் குறித்தும் தீபத்தில் கட்டுரைகள் எழுதியிருக் கிறார். தமிழ் நாட்டில் குடும்பப் பத்திரிகைகள், தமிழ் மொழியின் காவலர்கள், தமிழ் நாட்டின் நாளிதழ்கள், புதிய அலைக்கலைஞர் கள், தமிழர்கள் இரு வகை, தமிழ் இலக்கியத்தில் புதுமை, முற்போக் கும் பிற்போக்கும், மக்கள் ரசனைக்காக, தமிழ் எழுத்தாளர்கள், நாணயம் என்ன விலை ஆகிய தலைப்புகளில் அவர் எழுதியுள்ள கட்டுரைகள், சூடும் சுவையும் நிறைந்து, படிப்போரை சிந்திக்கத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன.

இலக்கியத்தில் இந்தியத்தன்மை குறித்தும், பொதுவாக இலக்கி யம் பற்றியும் க. நா. சுப்ரமண்யம் எழுதிய கட்டுரைகளையும், தி.ஜா னகிராமன் இலக்கிய ரசனை பற்றி எழுதிய கட்டுரைகளையும், இந் திரா பார்த்தசாரதி, கே. எஸ். ஸ்ரீநிவாசன் கட்டுரைகளையும் தீபம் பிரசுரித்திருக்கிறது.

கி. சந்திரசேகரன் இரு மகாகவிகள், டி.கே.சி. - சில நினைவு கள், நான் அறிந்த ராஜாஜி, மாக்ஸ்முல்லர் என்கிற வேதாந்தி மாமுனி வர் ஆனந்த குமாரசுவாமி பற்றிய ஆழ்ந்த சிந்தனைகளை கட்டுரை யாக்கியுள்ளார். இந்தியப் பண்பாடு குறித்தும் அவர் எழுதினார்.

நா. பார்த்தசாரதியின் தனிக்கட்டுரைகள் - தமிழில் இலக்கிய ஏடுகள், பழந்தமிழ் இலக்கியமும் தற்காலத்தமிழ் எழுத்தாளர்களும், இலக்கியத்தில் உளவியல் முறை, பழமொழிகள் காட்டும் சமுதாயம், சர்வதேச திரைப்படவிழா பற்றியவை - இடம் பெற்றுள்ளன.

தொ. மு. சி. ரகுநாதன், பாரதியின் மாயையைப் பழித்தல் ஒரு விசாரணை, பாரதியும் தேசிய ஒருமைப்பாடும், சோவியத் நாட்டில் எழுத்தாளர் சுதந்திரம், சென்னை வந்த சோவியத் எழுத்தாளரோடு சிலமணிநேரம் ஆகிய கட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

பாரதி குறித்து பல கோணங்களில் பலர் எழுதிய கட்டுரைகள் அவ்வப்போது தீபத்தில் வெளிவந்தன.

அகிலன், நீல. பத்மநாபன், ராஜம் கிருஷ்ணன் சில தனிக்கட்டு ரைகள் எழுதியுள்ளனர்.

தமிழர்கள் எருமைகளா? வ. ரா. வின் இலக்கிய நோக்கு, பாரதியின் தத்துவமும் இன்றைய சூழ்நிலையும், மகாகவியின் மரபில் வந்த பேனாவீரர் (பி. எஸ். ராமையா), மணிக்கொடியும் சிறு பத்திரிகைகளும் ஆகிய கட்டுரைகளை தி. க. சிவசங்கரன் எழுதியிருக்கிறார்.

வல்லிக்கண்ணனின் தனிக்கட்டுரைகளும் - தற்கால இலக்கியம், தனிக்கட்டுரைகளும் தொகுப்பு நூல்களும், சிதைந்து வரும் கலாசாரம், வெளிச்சம் வேண்டும், எழுத்தாளர்கள் பத்திரிகைகள், நா. பா வும் தீபமும் - சில நினைவுகள் - வெளி வந்துள்ளன.

புரட்சிக்கவி நஸ்ருல் இஸ்லாம், சரத் சந்திரர், தாகூர் இலக்கியம், மற்றும் சில கட்டுரைகளையும் சு.கிருஷ்ணமூர்த்தி எழுதியுள்ளார்.

நாடகம் பற்றி எம்.கே. மணிசாஸ்திரி எழுதிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன. தமிழ் நாடகத்தின் இன்றைய நிலை குறித்து கோமல் சுவாமிநாதன், இந்திரா பார்த்தசாரதி இருவரும் எழுதியிருக்கிறார்கள். நாடகமும் நாடகமரபும் பற்றி வெ.சுவாமிநாதன் எழுதிய கட்டுரை வந்திருக்கிறது. நாடகம் எழுதுதல் பற்றி இலங்கை ஏ.ரி. பொன்னுத்துரையும், நாடகம் - சில சிந்தனைகள் என்று இலங்கை கே.எஸ்.சிவகுமாரனும் எழுதியுள்ளனர்.

திரைப்படங்கள் குறித்தும் சில கட்டுரைகள் பிரசுரம் பெற்றுள்ளன.

விமர்சனம் பற்றியும் விமர்சகனின் பணி குறித்தும் ஒன்றிரண்டு கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன.

மலேசியாவில் தமிழ் எழுத்தாளர்கள் (கி. வேலுசுவாமி), மலாய் மொழியில் சிறுகதை வளர்ச்சி (ஜி. சூசை), மலேசியத் தமிழ் இலக்கியத்தில் மறுமலர்ச்சி சிந்தனைகள் - ஒரு கண்ணோட்டம் (ந. பாஸ்கரன்) போலந்தின் தேசிய கவி. (இராம சுந்தரம்), இலங்கை இரசிகமணி கனக செந்திநாதன் (ஏ. சி. பொன்னுத்துரை), கன்னட இலக்கிய மேதை காரந்த் (டி. எஸ் பார்த்தசாரதி)! இந்திய மறுமலர்ச்சியும் படைப்புச் சிந்தனையும் (வளர்வோன்)! பிரேம்சந்த் கதைகள் (சௌரி)! தகழியின் வாழ்க்கை நினைவுகள் (இளம் பாரதி)! ஐப்பானியக் கவிதை வடிவங்கள் (தமிழ் நாடன்)! தெலுங்கு மொழியில் வசனகவிதை - டாக்டர் சுப்ரசன்னா (விசாலன்)! இன்றைய மலையாளச் சிறுகதைகள் (இளம் பாரதி)! கிழக்கும் மேற்கும் - 1. வாழ்க்கை 2. காதல் 3. கல்வி (டாக்டர் எஸ். விஜயபாரதி)! மனிதனைப் பாடிய ஜனநாயகக் கவிஞர் - வால்ட் விட்மன் (மலர்மன்னன்)! கம்பனும்

வடமொழியும் (கே. எஸ். ஸ்ரீநிவாசன்)! பாரிஸ் - சில சுவையான நிகழ்ச்சிகள் (தமிழ்த் தொண்டன்)! சோவியத் நாட்டில் பெண்கள் (ராஜம் கிருஷ்ணன்) - இவ்விதம் தீபம் கட்டுரைகள் பரந்த அளவில் பார்வை செலுத்தியுள்ளன. இவ்வகையில் இன்னும் பல கட்டுரைகள் உள்ளன.

மேலும், தொழில் துறை, விவசாயம் போன்ற நாட்டின் வளங்கள் குறித்தும் ஆழ்ந்த சிந்தனைப் பாங்கான கட்டுரைகளை தீபம் பிரசுரித்திருக்கிறது. பிரபல தொழில் அதிபர்களும் விற்பன்னர்களும் அவற்றை எழுதியிருக்கிறார்கள்.

தொழிலதிபர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் பல கட்டுரைகள் வழங்கியுள்ளார். பொருளாதாரச் சிக்கல் தீரக் காந்திய வழி, சென்னை மாநிலத்தில் சர்க்கரைத் தொழில், காந்தியும் சகாக்களும் ஆகியவை முக்கியமானவை

சுதந்திரத்துக்குப் பின் தொழில் வளர்ச்சி, விவசாயத்தில் தொழில் வளர்ச்சி, கரும்பொன் (இரும்பு) ஆகியவை ஜி.ஆர். தாமோதரன் எழுதிய கட்டுரைகள்.

இந்தியன் ஆயில் கார்ப்பரேஷனின் பொது நலத் தொடர்பு அதிகாரி, பி.வி. ரெங்கநாத், 'பொருளாதார வளர்ச்சியில் எண்ணையின் பங்கு' பற்றி எழுதியுள்ளார்.

ஆங்கிலத்தில், அல்லது பிற மொழியில், வந்த முக்கியமான சில கட்டுரைகள் மொழி பெயர்க்கப்பட்டு தீபத்தில் வெளிவந்துள்ளன.

ஏ.எஸ் ராமன் எழுதிய 'தென்னிந்திய நாகரிகப் பிரபை' (தமிழில் ப. சுந்தரேசன்), கே. ஆர். ஸ்ரீனிவாச ஐயங்கார் எழுதிய 'சுதந்திர பாரதத்தில் இலக்கியப் போக்கு' (தம்பி சீனிவாசன்), சாமானிய மனிதனின் பிரச்னை - கமலேஷ்வர் (சௌரி), திருமதி தாரா பிரசாத் எழுதிய 'இனவெறுப்பைத் தூண்டும் திரைப்படங்கள்' (டி. எஸ் பார்த்தசாரதி), எம். வி. காமத்தின்' நாம் எந்தப் பாதையில் போகிறோம்?'' போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும்.

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுக கருத்தரங்கின் தமிழ்ப் பகுதியில் படிக்கப்பெற்ற பல்வேறு சிறந்த கட்டுரைகளின் சுருக்கங்களை தீபம் தொடர்ந்து வெளியிட்டு இலக்கியப் பணி புரிந்தது முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வற்றுடன், தீபம் பல முக்கியமான - பயன் மிகுந்த - கட்டுரைத் தொடர்களையும் வெளியிட்டு அரும் பணி ஆற்றியிருக்கிறது.

# 7. கட்டுரைத் தொடர்கள்

பொதுவாக பத்திரிகைகள் - இலக்கிய இதழ்கள் கூட - சுவாரசியமான நாவல்களைத் தான் தொடராக வெளியிடுவதில் ஆர்வம் காட்டுவது வழக்கம். கட்டுரைத் தொடர்கள் வறண்டதாய், வாசகர்களை வசீகரிக்கக்கூடிய தன்மை அற்றதாக, இருக்கும் என்பதே பெரும்பாலான பத்திரிகை ஆசிரியர்களின் எண்ணம்.

ஆனால் தீபம் இவ்வகையில் இதர பத்திரிகைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட போக்கையே கையாண்டு வந்தது. கனத்த, சிந்தனைக்கு இடம் தரக்கூடிய, ஆழ்ந்த விஷயங்கள் பற்றி எழுதப்பட்ட கட்டுரைகளை தொடர்களாக பிரசுரிப்பதில் மகிழ்ச்சி கண்டது. ஆரம்பம் முதலே இதை ஒரு கொள்கையாகக் கொண்டிருந்தார் நா. பா.

'தீபம்' முதல் இதழிலேயே 'கதாநாயகர்கள் - ஓர் இலக்கியச் சிந்தனை' என்கிற ஆழ்ந்த ஆய்வு ரீதியான கட்டுரைத் தொடரை கு. அழகிரிசாமி எழுத ஆரம்பித்திருந்தார். அது தொடர்ந்து பல மாதங்கள் வளர்ந்தது.

அதே சமயத்திலேயே ஜெயகாந்தன் 'திரைக்கு ஒரு திரை' என்ற தொடரை எழுதி வந்தார். திரைப்பட உலக அனுபவங்கள், படக்கலை சம்பந்தப்பட்ட சிந்தனைகள் பற்றி அவர் எழுதினார்.

அகிலன் 'கதைக்கலை' பற்றிய தனது கருத்துக்களை தொடர் கட்டுரையாகப் பதிவு செய்தார்.

சரத் சந்திரர் வாழ்க்கை பற்றி இளம் பாரதி எழுதிய கட்டுரைத் தொடரை தீபம் பிரசுரித்தது.

அடுத்து, 'மணிக்கொடிக் காலம்' என்ற தலைப்பில் மணிக்கொடி இலக்கிய இதழின் வரலாற்றை, அந்தப் பத்திரிகையின் ஆசிரியராக இருந்து, தமிழ் சிறுகதைக்கு இலக்கிய அந்தஸ்து ஏற்படுவதற்காகப் பெரிதும் பணியாற்றிய பி. எஸ். ராமையா எழுதினார் பயனுள்ள இக்கட்டுரைத் தொடருக்கு நல்ல வரவேற்பு கிட்டியது.

இத்தொடர் முற்றுப் பெற்றதும், வ. விஜயபாஸ்கரன் நடத்திய முற்போக்கு இலக்கிய இதழான 'சரஸ்வதி'யின் வரலாற்றை வல்லிக்கண்ணன் தொடர்ந்து எழுதினார்.

இடைக்காலத்தில், 'விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள்' என்று எழில்முதல்வன் எழுதிய தொடர் வெளிவந்தது.

அகிலன் தனது வாழ்க்கை அனுபவங்களை 'எழுத்தும் வாழ்க்கையும்' என்று தொடர்ந்து எழுதியுள்ளார்.

'சரஸ்வதிகாலம்' தொடரை அடுத்து வ. க. 'புதுக் கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' குறித்து விரிவாக எழுதிய தொடர் இடம் பெற்றது.

சி.சு.செல்லப்பா, 'எழுத்து' பத்திரிகையின் வளர்ச்சி குறித்து 'எழுத்து அனுபவங்கள்' தொடரை வழங்கினார்.

'தீபம்' தொடர்கதைகளை விட எழுத்து அனுபவங்கள், புதுக்க விதையின் தோற்றமும் வளர்ச்சியும், எழுத்தும் வாழ்க்கையும் போன்ற கட்டுரைத் தொடர்களை அதிகமாக வெளியிடுகிறோம். இலக்கியமாதப் பத்திரிகைகளில் தீபம் இப்பணியைச் சிரத்தையோடு செய்ய விருப்புகிறது. மாதப் பத்திரிகைகளில் தொடர்கதைகளை விட இப்படித் தொடர் அம்சங்கள் இலக்கிய வரலாற்றுக்கு நிலை யான பயனை நல்க முடியும் என்று நாங்கள் நம்புகிறோம். தீபம் முன்பு வெளியிட்ட மணிக்கொடிக்காலம், சரஸ்வதி காலம் போன்ற தொடர்களுக்கு இப்படி ஒரு மதிப்புக்கிட்டியிருப்பதையும் நாங்கள் உணர்கிறோம். தமிழ் இலக்கியத்தின், வளமான, பலமான, காலகட் டங்களை ஒவ்வொரு தலைமுறை வாசகர்களுக்கும் அறிமுகப்படுத் துகிற இந்த முயற்சியை இலக்கிய ரசிகர்கள் இன்னும் நன்றாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்று (மீண்டும்) தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்' என்று நா.பா விசேஷக்குறிப்பு ஒன்றை 'இலக்கிய விருந்து' என்று எழுதியுள்ளார்

'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' கட்டுரைத் தொடர் நான்கு வருடங்களுக்கு மேலாக வெளிவந்து இலக்கியவாதிகளின் நன்மதிப்பையும் பாராட்டுதல்களையும் அதிகம் பெற்றது. அதனால் வ. க. தொடர்ந்து 'பாரதிக்குப் பின் தமிழ் உரை நடை,' 'தமிழில் சிறு பத்திரிகைகள்' ஆகிய தொடர்களை எழுத நேர்ந்தது. ஒவ்வொன்றும் தீபத்தில் நான்கு வருடங்கள், நாலரை வருடங்கள் என்று நீடித்தது. ஆயினும் அலுப்பு ஏற்படுத்தாத தொடர்களாகவே இருந்தன.

கு. ராஜவேலு 'சித்திரச் சிலம்பு' என்று சிலப்பதிகாரக் கட்டுரை களை ஒப்பியல் அடிப்படையில் ரசமாக எழுதினார். சிலப்பதிகார நயங்களை எடுத்துச் சொல்வதோடு ஆங்கிலக் கவிதைகள் மற்றும் காவியங்களின் சிறப்புகளையும் அவர் விளக்கமாக இத்தொடரில் எழுதியுள்ளார்.

'சம்பந்தமில்லாத விஷயங்கள்' பற்றி ஜெயகாந்தன் தொடர்ந்து எழுத முனைந்தார். ஆனால் மூன்று இதழ்களுக்கு மேல் அது தொடர வில்லை.

சோ. சிவபாதசுந்தரம் 'வசன சம்பிரதாயக்கதை' பற்றியும், இரா. சுராஜ் 'பாரதி அனுபவம்' பற்றியும், ந. ஜயபாஸ்கரன் 'ஒரு தமிழ் மாணவனும் கவிதையும்' குறித்தும் தொடர்ந்து கட்டுரைகள் எழுதி யுள்ளனர்.

திரைப்படம் குறித்த தொடர்களை தீபம் அவ்வப்போது வெளி யிட்டு வந்தது. 'திரை உலகம் திருந்த' என்று த. ராசுவும், 'தமிழ்த் திரை உலகில் புதுப்புனல் பாயுமா?' என்று 'கலை அன்பன்' என்பவ ரும் தொடர்ந்து எழுதினார்கள்.

தீபத்தின் இறுதிக் கட்டத்தில் சி.சு. செல்லப்பா 'நமது இலக்கியத் தேட்டம்' என்ற ஆழ்ந்த ஆய்வுரீதியான கட்டுரைத் தொடரை எழுத லானார். சிட்டி 'இலக்கிய தரிசனம்' என்றும், சோ. சிவபாதசுந்தரம் 'இலக்கிய யாத்திரை' என்றும் சுயசரிதைப்பாங்கான கட்டுரைத் தொடரை எழுதி வந்தனர். இவை நிறைவு பெறவில்லை.

தீபம் தனது இயல்பின்படி, தொடர்கட்டுரைகளிலும் மொழிபெ யர்ப்புப் பணியை சிறப்பாகச் செய்துள்ளது.

வங்க மொழியில் ஸ்ரீ அன்னதா சங்கர்ராய் எழுதிய 'கலை' சம்பந்தமான கனத்த சிந்தனைகளை சு. கிருஷ்ணமூர்த்தி தமிழாக்கியி ருக்கிறார்.

சாமானிய மனிதன், அவனது நோக்கு, பிரச்சினைகள் போராட் டம் குறித்து கமலேஷ்வர் இந்தி மொழியில் எழுதிய, ஆழமான சிந்தனைகளைக் கொண்ட, கட்டுரைகளின் மொழிபெயர்ப்பு தொடர்ந்து பிரசுரம் பெற்றது. தமிழாக்கம்: சௌரி.

மலையாளத்திலிருந்து அதிகமாகவே கட்டுரைத்தொடர்கள் தமிழாக்கப்பட்டுள்ளன. முதலில், 'இராஜலட்சுமி என்ற கதாசிரியை' பற்றிய சிறு தொடர். இறந்து விட்ட இந்த மலையாளக் கதாசிரியை பற்றி என். வி. கிருஷ்ணவாரியார், எம். டி. வாசுதேவன் நாயர், எம். ஆர். சந்திரசேகர் எழுதியிருந்த கட்டுரைகளை இளம் பாரதி தமிழில் தந்தார். தகழியின் வாழ்க்கை அனுபவக் கட்டுரைகளும் மொழி பெயர்ப்பில் வந்தன.

இவற்றை விட முக்கியமானது - தனிச்சிறப்புடைய கட்டுரைத் தொடர் - 'முழுமையைத் தேடும் முழுமையற்ற புள்ளிகள்' என்பது. பெயர் பெற்ற கேரள எழுத்தாளர்கள் பலரையும் பற்றி வி. சி. பி நாயர் விசேஷமான ஒரு முறையில் எழுதிய அறிமுகக் கட்டுரைகள் அவை. எழுத்தாளர்களுடன் நன்கு பழகிய அனுபவத்தில் எழுதப்பட்ட ரச மான வாழ்க்கைச் சித்திரங்கள். அவற்றை குறிஞ்சி வேலன் இனிய தமிழில் மொழிபெயர்த்திருந்தார். இவை இலக்கிய ரசிகர்களின் கவ னத்தைக் கவர்ந்து மிகுந்த அளவில் பாராட்டுகளைப் பெற்றன.

# 8. சூடும் சுவையும்

இலக்கியப் பத்திரிகை கனமான - 'ஸீரியஸ்' - விஷயங்களை மட்டுமே கொண்டிருக்கவேண்டும் என்பதில்லை. சுவாரசியமான கிண்டல், குத்தும் நையாண்டி, பரிகாசம், அங்கதம் போன்ற சுவைகளைக் கொண்ட 'லைட்டர் வெயின்' சமாச்சாரங்களும் இருக்க வேண்டியது தான். தீபம் இந்த வகையிலும் பல அம்சங்களை அளித்து வந்தது - வம்பு மேடை, ரசமட்டம், இரத்தினச் சுருக்கம் முதலிய தலைப்புகளில்.

இவை பத்திரிகை உலகத்தில் நிலவிய போலித்தனங்களையும் எத்து வேலைகளையும் வேஷயங்களையும் நகைச்சுவை உணர்வோடு வெளிச்சமிட்டு காட்டின.

'வம்பு மேடை' யிலிருந்து சில உதாரணங்கள் -

✱ காவிய கௌரவம்

வ.உ.சி. சிவா, நௌரோஜி, டாக்டர். உ.வே.சா., ரவிவர்மா, சுப்புராம தீட்சிதர் போன்றவர்கள் ஒருநாளும் இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரலாக இருக்க நேர்ந்ததில்லை. ஆனால் அதை விட பெரிய பாக்கியம் ஒன்று இவர்களுக்கு எல்லாம் கிடைத்திருக்கிறது.

அதாவது, இவர்களை எல்லாம் மகாகவி பாரதியார் தம் அமுத வாக்கினால் ஒவ்வோரிடத்தில் புகழ்ந்து பாடியிருக்கிறார். பாரதியின் கவிதைத்தலைமுறையில் அவர் வாக்கில் விழுந்த ஒவ்வொருவரும் மகாபாக்கியசாலிகள் தான்.

✱ ஹாஸ்யப் பஞ்சம்: ஒரு பயந்த கேள்வி

மேல் நாட்டிலிருந்து வரும் அத்தனை நவீன மோஸ்தா பத்திரிகைகளையும் நிறுத்தி வராமற் செய்து விட்டாலோ, கிடைக்காமற் செய்து விட்டாலோ இங்கு நிலைமை என்ன ஆகும்?

ஒரு துணிந்த பதில்: தமிழ்ப் பத்திரிகைகளில் நிச்சயமாக ஹாஸ்யம் செத்துப் போகும். துணுக்குகளும் 'ஸ்பேஸ் ஃபில்லர்' களும் (இடம் நிரப்பிக்கட்டம் கட்டிப் போடுகிற துணுக்குகள்) வரமாட்டா.

✱ 'ருசி விரும்பிய வாய் பத்தியம் காக்கமுடியாது' என்று ஒரு பழமொழி உண்டு. இலக்கியத்துக்குத் தொண்டு செய்வதாகக் கூறும் சில தமிழ்ப் பத்திரிகைகள் சினிமாப் பகுதியையும் கட்டிக் காத்து வாசகர்களை உய்விக்கும் ருசியைப் பழக்கிவிட்டன. ஆகவே தரம் என்கிற பத்தியத்தை அவற்றால் காக்க முடியாமற் போனதில் வியப்பில்லை.

✱ ✱ ✱ ✱

ரசமட்டம்' பகுதியிலிருந்து -

★ தெரியாத மொழி

சமீபத்தில் தமிழ் எழுத்தாளர் சங்கம் வெளியிட்டிருக்கும் 'யார் எவர்?' நூலில் ஓர் எழுத்தாளரைப் பற்றி அறிமுகப்படுத்துகிற பகுதியைக் கீழ்க்கண்டவாறு இரைந்து வாய்விட்டுப் படித்தார் ஒருவர்:

இவர் அறிந்த பிற மொழிகள் ஆங்கிலம், சம்ஸ்கிருதம், பிரெஞ்சு, ஜெர்மன், ஸ்பானிஷ், ஸ்வீடிஷ், நார்வெஜியன்...

படீரென்று குறுக்கிட்டு மற்றொருவர் கூறினார்: அறியாத மொழி தமிழ்!

★ பத்துக்கிலோ நாவல்!

ஒரு பதிப்பாளருக்கும் எழுத்தாளருக்கும் நடந்த பேரம் வருமாறு -

| | | |
|---|---|---|
| எழுத்தாளர் | : | நாவல் ஒண்ணு இருக்கு.... |
| அசுரவேகப் பதிப்பாளர் | : | எத்தனை கிலோ வரும்? |
| எழுத்தாளர் | : | கிலோவா? நிறுக்கலையே! |
| பதிப்பாளர் | : | ஐந்து கிலோவானால் ஐம்பது ரூபாய் அவுட்ரைட்டாக கொடுக்கணும். |

★ ★ ★ ★

மற்றொரு பகுதி -

| இப்படி அச்சாக வேண்டியது | இப்படியும் அச்சாகி விடலாம். |
|---|---|
| கட்டிடத்திற்கு மந்திரி அடித்த ளம் நாட்டிய போது | கட்டிடத்திற்கு மந்தி அடித்த ளம் நாட்டிய போது |
| வெற்றிப் பெருமிதத்தால் மக்கள் ஆரவாரம் | வெற்றுப் பெருமிதத்தால் மக்கள் ஆரவாரம் |
| இந்துதேச சரித்திரம் | இந்துதேச தரித்திரம் |
| காப்பி குடித்துக் கொண்டிருந்த போது எழுத்தாளரைச் சந்திக்க நேர்ந்தது. | காப்பி அடித்துக் கொண்டிருந்த போது எழுத்தாளரைச் சந்திக்க நேர்ந்தது. |

★ ★ ★ ★

'இரத்தினச்சுருக்கம்' என்ற பகுதி நா. பா. வின் சிந்தனைகளின் தொகுப்பு. 'பொன்முடி' என்ற பெயரில் அவர் எழுதிய இக்குறிப்புகளில் நகைச்சுவையும் கருத்தாழமும் கலந்து காணப்பட்டன.

'அவர் மறைவினால் பத்திரிகைத் தொழிலுக்குப் பெரிய நஷ்டம்' - ஓர் ஏஜெண்டின் மறைவு குறித்து ஒரு பத்திரிகையின் அனுதாபச் செய்தி.

அதாவது - பல மாதங்களாகப் பல பத்திரிகைகளுக்கு அவர் பணம் அனுப்பாமலே பாக்கி நிறுத்தி விட்டதால் பத்திரிகைத்

தொழில் அவரால் மொத்தத்தில் நஷ்டப்பட்டு விட்டது என்பது உட் பொருளாயிருக்கலாமல்லவா?

நீங்கள் ஒரு பிரமுகராக வேண்டுமானால் முதலில் மற்றவரை சாதாரணமானவர்களாக்கிவிட்டு முன்னால் வந்து நில்லுங்கள். மற்ற வர்களைப் பிரமுகர்களாக்க வேண்டுமானால் நீங்கள் பின்னால் சாதா ரணமானவர்களாக ஒதுங்கி நின்று கொண்டு மற்றவர்களுக்குத் தாரா ளமாக வழி விட்டு விடுங்கள். பிரமுகராவதின் இரகசியம் முன்னால் ஓடுவதிலும் - பின்னால் ஒதுங்கி நிற்பதிலும் தான் இருக்கிறது.

கங்கை - அது இங்கு வெறும் நீர்ப் பிரவாகமாக மட்டும் ஓட வில்லை. இந்த நாட்டு வாழ்க்கையின் பல்லாயிரங்காலத்துச் சாராம்ச மாகவே அது பெருகிவருகிறது என்று சொல்லலாம். இப்படி அதை நினைப்பது தான் எத்தனை கம்பீரமான நினைவாகயிருக்கிறது!

* * * *

'மறைவாக நமக்குள்ளே' என்றொரு பகுதி. நசிகேதன், க. நா. சுப்ரமணியம் எழுதி வந்தனர்.

கலை இலக்கிய உலக மாரீசங்கள் -

'சோ' எழுதிய 'மனம் ஒரு குரங்கு' என்ற நாடகம் பெர்னாட்ஷா வின் 'பிக் மாலியன்' நாடகத்தின் மாரீசமாகும் போன்ற தகவல்கள் - எழுத்து உலகத்தில் நிலவுகிற பெருமை சிறுமைகள், பல்கலைகழ கங்களின் மெத்தனப் போக்கு போன்ற பலப்பல விஷயங்கள் இப்பகு தியில் அலசப்பட்டன.

இப்பகுதிகள் தொடர்ந்து நீண்ட காலம் வரவில்லை. 'இரத்தினச் சுருக்கம்' இதர அம்சங்களைப் பார்க்கிலும் அதிக காலம் வந்துள்ளது.

* * * *

இலக்கிய மேடை என்ற பகுதியில் வாசகர்களின் கேள்விக ளுக்கு நா. பா. பதில் அளித்தார். அவருடைய நகைச்சுவை உணர்வு, அங்கதம், சூடாகப் பதில் கொடுத்தல், சிந்தனைத் திறம், புலமை முதலிய பண்புகள் இப்பகுதியில் பளிச்சிட்டன. இறுதிக்காலம் வரை இந்தப் பகுதி தொடர்ந்தது.

நா. பா. வின் கூரிய பதில்களுக்குச் சான்றாக சில -

கேள்வி : சகல திசைகளிலும் இன்று நாட்டில் தென்படும் உணர்வு என்ன?

பதில் : சுயநலம். எந்தச்சிறிய அல்லது பெரிய காரியத்திலும் சுய நலம் பார்த்தே செயல்படும் உணர்வு வளர்ந்திருக்கிறது. தனக்கு லாபமில்லாத நல்ல காரியத்தையோ கெட்ட காரி யத்தையோ யாரும் செய்வதேயில்லை. பொது நலம்

பார்ப்பது, சுயநலத்தைத் தவிர்ப்பது ஆகிய நற்குணங்கள் புராதன விஷயங்களாகிவிட்டன.

கேள்வி : கவிதாயினி என்றால் என்ன அர்த்தம்?

பதில் : கவிஞர் என்ற பதமே ஆண்பால் - பெண்பால் இரண்டிற்கும் பொதுவானது தான். அந்த அடைமொழியை கவிஞர் மேத்தா என்றும், கவிஞர் நிர்மலா சுரேஷ் என்றும் இரு பாலருக்குமே போட்டு அழைக்கலாம். பெண்பாலுக்கு கவிதாயினி எனப் புதிதாக ஒரு 'வெஜிடபிள் பிரியாணி' வார்த்தையைப் போட்டு குழப்ப வேண்டியதில்லை.

கேள்வி : அரசியல்வாதிக்கும் சினிமாக்காரர்களுக்கும் கிடைக்கும் விளம்பரம் இலக்கியவாதிக்கோ விஞ்ஞானிக்கோ கிடைப்பதில்லையே?

பதில் : நம் நாட்டின் சாபக்கேடு அது. அறிவும் விஞ்ஞானமும் இங்கு இரண்டாம் பட்சமானவையாகக் கருதப்படுகின்றன. சினிமாவும் அரசியலுமே முதலிடம் பெறுகின்றன.

கேள்வி : சராசரி மலையாளிக்கும் சராசரித் தமிழனுக்கும் என்ன வித்தியாசம்?

பதில் : சராசரி மலையாளி தாய் மொழிப் பற்றைச் சொல்லிலும் செயலிலும் காட்டுவான். கடைப்பிடிப்பான். தாய் மொழிப் பத்திரிகைகள், புத்தகங்களைக் காசு கொடுத்து வாங்கி ஆதரிப்பான். புகழ்வான். போற்றிப் பாதுகாப்பான். சராசரி தமிழன் தாய்மொழிப்பற்றை மேடைகளில் ஆவேசமாகக் காண்பிப்பான். 'உயிர் தமிழுக்கு - உடல் மண்ணுக்கு' என்று டயலாக் பேசுவான். சுவர்களில் எழுதி முழக்குவான். நடைமுறையில் சினிமாவுக்கும் சாராயக்கடைக்குமே காசு செலவழிப்பான். தமிழைக் காசு கொடுத்து வாங்கிப் படிக்க மாட்டான். கடன் வாங்கியாவது குழந்தைகளை ஆங்கிலப் பள்ளியில் சேர்ப்பான். ஆங்கிலேயரைப் போல் உடையணிவான். அப்படித் துரையாகத் தலை கனத்துத் திரிவான் - இது தான் வித்தியாசம்.

கேள்வி : எழுத்தாளர்கள் எதிலாவது ஒற்றுமையாக இருக்கிறார்களா?

பதில் : எதிலும் ஒற்றுமையாயிருக்கக்கூடாது என்பதில் மிகவும் திடமான ஒற்றுமையோடு இருந்து வருகிறார்கள்.

கேள்வி : பேனாவால் எழுதுவது நல்லதா? பென்சிலால் எழுதுவது நல்லதா? பேனாவால் எழுதுவது என்றால் கறுப்புமை

யால் எழுதுவது நல்லதா? நீலமையால் எழுதுவது நல்லதா?

பதில் : இப்படி எழுத்துக்குச் சம்பந்தமில்லாத உப்புப்பெறாத விஷயங்களைப் பற்றி சதா யோசித்துக் கொண்டிருப்பவர்கள் எழுதாமல் இருப்பதே நல்லது.

கேள்வி : தமிழ் வாரப்பத்திரிகைகள் ஆற்றும் பணி?

பதில் : மக்கள் தலையில் மிளகாய் அரைப்பது. மசாலா வியாபாரம் இத்யாதி.

கேள்வி : தமிழ் நாட்டு வாசகன் எப்படிப்பட்டவன்?

பதில் : எழுத்துக்களைப் படிக்கவும், சிந்திக்கவும், விவாதிக்கவும் தகுதி இல்லாத நிலைக்குத் தாழ்ந்து, துணி இல்லாமல் பெண் படங்களைப் பார்க்கும் அளவு மட்டமாகிவிட்டான் என்று அவனைப் பிரபல பத்திரிகைகள் எடை போட்டு முடித்திருக்கின்றன. அந்த நிறுவை தன்னை அவமானப்படுத்துவதைக் கூட அவன் இன்னும் உணர்ந்து சீறி எழ முன்வரவில்லை.

கேள்வி : தமிழ் நாட்டுப் பெண் எழுத்தாளர்களில் சிலர் ரொம்பவும் மோசமாகப் போகிறார்களே?

பதில் : அவர்கள் 'பைசா நரகத்தில் சாய்ந்த கோபுரங்கள்' என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள்.

கேள்வி : தமிழ்ப் பத்திரிகைகளின் போட்டியில் ஆரோக்கியம் இருக்கிறதா?

பதில் : நாகரிகம் கூட இல்லை. அப்புறம் எப்படி ஆரோக்கியம் இருக்க முடியும்? பல பத்திரிகைகள் விஷயத்தின் தரத்தை நம்புவதை விட கவர்ச்சிப் படங்களைக் காட்டி மயக்குவதற்குத் தொடங்கி விட்டன.

கேள்வி : தமிழ்ப் பத்திரிகை உலகம் வாசகர்களை எங்கே அழைத்துச் செல்கிறது?

பதில் : அழிவின் எல்லைக்கு அழைத்துச் செல்கிறது. பயனின்மைக்கும், அறிவு மலட்டுத் தனத்துக்கும் சவிஸ்தாரமாக வழிகாட்டி அழைத்துப் போகிறது. பலி பீடம் போகும் ஆடுகள் போல் வாசகர்களும் போய்க் கொண்டிருக்கிறார்கள்.

கேள்வி : அறிந்தே செய்யும் பாவம் என்பது என்ன?

பதில் : தமிழ்ப் பத்திரிகைகள் சினிமாவுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தைச் சொல்லலாமே!

# 9. இலக்கியச் சந்திப்புகள்

தீபம் இதழுக்குப் பெருமைச் சேர்த்த சிறப்பு அம்சங்களில் 'இலக்கியச் சந்திப்புகள்' என்பதும் ஒன்று ஆகும்.

பெயர் பெற்ற எழுத்தாளர்கள், இலக்கியவாதிகளைப் பேட்டி கண்டு, அவர்களுடைய கருத்துக்களை சேகரித்து, இதழ் தோறும் வெளியிட்டு வந்தது தீபம். முதன் முதலாக, 'கலைமகள்' ஆசிரியர் கி. வா. ஜ. சந்திப்பை விவரித்திருந்தார் தபஸ்வி.

அடுத்து, கிருஷ்ணமணி லா. ச. ராமாமிர்தத்தை சந்தித்து எழுதி னார். தொடர்ந்து அவர் அநேக இலக்கியவாதிகளை பேட்டி கண் டார். நாரணதுரைக்கண்ணன், ந. சிதம்பரசுப்பிரமணியன், வெ. சாமி நாத சர்மா, தி. ஜ. ர., பி. எஸ். ராமையா, பெரியசாமி, தூரன், க. நா. சுப்பிரமணியம், தி. ஜானகிராமன், கு. அழகிரிசாமி, ஜெயகாந் தன் ஆகியோரையும் கிருஷ்ணமணி சந்தித்து எழுதியுள்ளார்.

மணிக்கொடி ஸ்ரீநிவாசனை தி.க.சி. சந்தித்து, அவருடைய அபிப்பிராயங்களைக் கேட்டு எழுதினார். டி. எஸ். சொக்கலிங்கம், நா. வானமாமலை, தொ. மு. சி. ரகுநாதன் சந்திப்புகளும் வெளியி டப்பட்டன. பேட்டி கண்டவர் தி. க. சி.

தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரை மணி சாஸ்திரி (கிருஷ்ண மணி) பேட்டி கண்டிருக்கிறார். ஜி. சங்கரகுருப் என்ற கேரளக் கவிஞ ரையும் அவர் சந்தித்து கருத்து சேகரித்துள்ளார்.

அ. சீனிவாச ராகவன், கு. அருணாசலக் கவுண்டர் சந்திப்புக ளையும் தீபம் வெளியிட்டுள்ளது. இவர்களை நெல்லை ஆ. கணபதி பேட்டி கண்டிருக்கிறார்.

அசோகமித்திரன், கி. சந்திரசேகரன் அ.ச. ஞானசம்பந்தன் இரு வரையும் சந்தித்து எழுதியுள்ளார். மௌனி, சி.சு. செல்லப்பாவை கி. அ. சச்சிதானந்தன் பேட்டி கண்டார்.

சிங்கப்பூரில் 'தமிழ் முரசு' நாளிதழ் நடத்திய தமிழவேள் கோ. சாரங்கபாணி, இலங்கை தனிநாயகஅடிகள், அ. கைலாசபதி, வங்க

நாவலாசிரியர் தாரா சங்கர் பானர்ஜி, மலையாள எழுத்தாளர் பாரப்பு ரத்து, பி. கேசவதேவ், யாழ்ப்பாணம் இரசிகமணி கனகசெந்திநாதன், கேரளம் தகழி சிவசங்கரப்பிள்ளை, 'உருபு' என்கிற பி.சி. குட்டி கிருஷ்ணமேனன் இலக்கியச் சந்திப்புகளும் பிரசுரம் பெற்றிருக்கின் றன.

திருலோக சீதாராம், ம. ரா. போ. குருசாமி, கா. அப்பாத்துரை, கே. சுவாமிநாதன், மீ. ப. சோமசுந்தரம், ந. பிச்சமூர்த்தி, எஸ். மகராஜன், க. சந்தானம், முருகு சுப்பிரமணியன், மே. வி. வேணுகோ பாலப்பிள்ளை, ஏ. கே. ராமானுஜன், பாபானி பட்டாச்சார்யா, ஏ. என். சிவராமன், ம. பொ. சிவஞானம், கு. ராஜவேலு, ஆர். சண்முக சுந்தரம், வைக்கம் முகம்மது பஷீர், ஆர். கே. நாராயணன், ராஜா ராவ், மு. வரதராசன், உருதுக்கவி ரகுபதி ஸஹாய், பி. பத்மராஜு, பிரபாகர் மாச்சே, ராஜம் கிருஷ்ணன், விஸ்வநாத சத்யநாராயணா, 'தமிழ்க் கடல்' இராய. சொ., சா. கணேசன், என்று பரந்த நோக்குடன் 'இலக்கியச் சந்திப்பு' நடத்தப்பட்டுள்ளது.

வங்க எழுத்தாளர் சிவகுமார் ஜோஷியை சு. கிருஷ்ணமூர்த்தி பேட்டி கண்டு எழுதினார். மகாகவி ஸ்ரீ ஸ்ரீ, மராட்டிய எழுத்தாளர் ஜயவந்த் தள்வி, கேரளம் எம். டி. வாசுதேவன் நாயர், கன்னடம் மத்தூர் கிருஷ்ண மூர்த்தி, ஹிந்தி எழுத்தாளர் டாக்டர். ராமவிலாஸ் சர்மா, மலையாளம் வயலப்பில் ஸ்ரீதர மேனன், கன்னடம் கே. வி. புட்டப்பா, மலையாத்தூர் இராம கிருஷ்ணன், ஞானபீடம் பரிசு பெற்ற கவிஞர் தினகர், வங்கக் கவிஞர் விஷ்ணுதே என்று பல மொழிகளைச் சேர்ந்தவர்களின் பேட்டியைத் தீபம் வெளியிட்டிருக்கி றது.

நெ. து. சுந்தரவடிவேலு, பேராசிரியர் ந. சஞ்சீவி, சென்னை மாநகர நூலக ஆணைக்குழுத் தலைவர் கே. பி. சுந்தரம், டாக்டர் முத்து சண்முகம், டாக்டர் வ. சுப. மாணிக்கம், டாக்டர் எஸ். இராமகி ருஷ்ணன், காந்தி கிராமம் டாக்டர் சௌந்தரம் ராமச்சந்திரன், சென்னை பல்கலைக்கழகம் துணைவேந்தர் மால்கம் ஆதி சேஷய்யா, டாக்டர் கார்த்திகேசு சிவத்தம்பி, டொமினிக் ஜீவா ஆகியோரும் இலக்கியச் சந்திப்புகளில் அவரவர் அபிப்பிராயங்களை வெளியிட் டுள்ளனர்.

'பிளேபாய்' எனும் உலகப்புகழ் பெற்ற ஆங்கில சஞ்சிகையில் வந்த அயன்ராண்ட் பேட்டியை தமிழாக்கி வெளியிட்டது தீபம்.

லெபனான் கவிஞர் பாசி அட்லியை குவெய்த் வாசு பேட்டி கண்டு எழுதியுள்ளார். பிரெஞ்சு எழுத்தாளர் சாத்தேயை தீபக் சர்மா பேட்டி கண்டு இந்தியில் எழுதியதை சௌரி தமிழாக்கி, தீபம் பிரசுரித்தது.

இப்படியாக இலக்கிய உலகப் பிரச்சினைகள், இலக்கியம் பற்றிய பல்வேறு கருத்துக்கள், பிரபல படைப்பாளிகள் - இலக்கியவாதிகளின் தனிப்பட்ட அபிப்பிராயங்கள், ஆலோசனைகள் முதலியவற்றை தமிழ் இலக்கிய ரசிகர்கள் தெரிந்து கொள்வதற்கு தீபம் பெரிதும் உதவியிருக்கிறது.

இலக்கியச் சந்திப்பு மூலம் தங்கள் அனுபவங்களையும் அபிப்பிராயங்களையும் வெளிப்படுத்த வாய்ப்பில்லாது போன முக்கிய எழுத்தாளர்களை 'நானும் என் எழுத்தும்' என்ற தலைப்பில் எழுதும்படி நா. பா கேட்டுக் கொண்டார்.

சுந்தர ராமசாமி, நகுலன், கி. ராஜநாராயணன், வல்லிக்கண்ணன், ஹெப்சிபா ஜேசுதாசன், தி.சா. ராஜூ, செ. கணேசலிங்கன், ஆர். வி., மகரிஷி, சரோஜா ராமமூர்த்தி, பி. வி. ஆர்., ர. சு நல்லபெருமாள், ஆதவன், வாசவன், கர்ணன், அசோகமித்திரன், சார்வாகன், நீல, பத்மநாபன், ஆகியோர் அவரவர் எண்ணங்களை, அவரவருடைய நோக்கிலும் போக்கிலும் எழுதியுள்ளனர். நா. பார்த்தசாரதியும் இத்தலைப்பில் எழுதியிருக்கிறார்.

ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்த அருமையான கட்டுரை ஆகும். 'சரஸ்வதி' யில் வந்த 'நான் சென்னைக்கு வந்தேன்' கட்டுரைகள் போலவும், 'எழுத்து' பிரசுரித்த 'ஏன் எழுதுகிறேன்' கட்டுரைகள் போலவும், இவை சூடும் சுவையும் இலக்கியத் தகவலும் நிறையப் பெற்ற கட்டுரைகள் ஆகும். இவை தொகுக்கப்பட்டு தனி நூலாகப் பின்னர் வெளிவந்துள்ளன. ('எழுத்து' வில் வந்த 'ஏன் எழுதுகிறேன்?' கட்டுரைகள் மட்டும் எழுத்து பிரசுரம் ஆக புத்தக வடிவம்

பெற்று, இரண்டு பதிப்புகள் வந்தன. 'சென்னைக்கு வந்தேன்' புத்தக மாக வரவில்லை)

எழுத்தாளர்கள், இலக்கியவாதிகள் பேட்டிகளைத் தொடர்ந்து வெளியிட்ட தீபம் அவ்வப்போது தொழில் அதிபர்களை சந்தித்து, அவர்களது கருத்துக்களை சேகரித்தும் பிரசுரித்திருக்கிறது.

நா. மகாலிங்கம், ஜி. ஆர். தாமோதரன், ஜி. டி. நாயுடு, ஜி. கே. சுந்தரம், வி. எஸ். தியாகராஜ முதலியார், எச். வி. ஆர், ஐயங்கார், எம். எம் முத்தையா, டி. சி. தோத்தாரி, எம். சி. டி. பெத்தாச்சி, கே. ஈஸ்வரன், பத்மஸ்ரீ கே. எஸ். ஜி. ஹாஜா ஷெரிப் ஆகியோரின் பேட்டிகள் வெளிவந்துள்ளன.

மற்றொரு விதமான பேட்டியையும் தீபம் வெளியிட்டிருக்கிறது. மரபிலும் முறையான தமிழ்ப்படிப்பிலும் ஊறிய பேராசிரியர்கள் தற்காலத் தமிழ் மற்றும் இலக்கிய முயற்சிகள் பற்றி என்ன நினைக்கி றார்கள் என்பதை அறிவதற்காக பலரை சந்தித்து, இலக்கிய விஷயங் கள் குறித்த கேள்விகளைக் கேட்டு, அவர்களது அபிப்பிராயங்களை சேகரித்துப் பிரசுரித்தது. அவ்விதம் பேட்டி கண்டு கருத்துக்களை சேகரித்தவர் சேவற்கொடியோன், பல்வேறு கல்லூரிகளின் தமிழ்த்து றைத் தலைவர்களை அவர் சந்தித்துப் பேசியுள்ளார்.

பேராசிரியர்களான சுப. அண்ணாமலை, சு. குழந்தைநாதன், மதுரை மீனாட்சி அரசினர் மகளிர் கல்லூரி முத்தம்மாள் கௌரிநா தன், கண. சிற்சபேசன், திருமதி சக்தி பெருமாள், இரகுபதி சாமிநா தன், எஸ். வி. சுப்பிரமணியன், டாக்டர் தமிழண்ணல், சி. கனகசபா பதி, வா. சு. கோவிந்தன், பள்ளத்தூர் கல்லூரி சரஸ்வதி இராமநாதன் ஆகியோர் கருத்து தெரிவித்துள்ளனர். 'இவர்கள் இப்படிக் கருதுகி றார்கள்' என்ற தலைப்பில் அவை பிரசுரம் பெற்றன.

இந்தப் பகுதிக்காக பெங்களூர் தமிழ்ப் பேராசிரியை தி. க. நாகாம்பாள் கருத்துக்களை பெங்களூர் எழுத்தாளர் அமுதவன் சேக ரித்து அனுப்பியுள்ளார்.

# 10. புதிய பகுதிகள்

தீபம் இதழில் அவ்வப்போது புதிய பகுதிகளை சேர்ப்பதில் நா. பா. மிகுந்த ஆர்வம் உடையவராக இருந்தார். அப்படி இணைக்கப்படுகிற பகுதிகள் சும்மா புதுமைக்காக என்றில்லாமல், பயனுள்ளவையாகவும், அரிய தகவல்களை வாசகர்களுக்கு அளிக்கக் கூடியனவாகவும் இருக்க வேண்டும் என்பதில் அவர் கவனமாக இருந்தார்.

'நினைவில் நிற்கும் முன்னுரைகள்' என்றொரு பகுதி வந்தது. அது சிறிது காலம் தொடர்ந்து வெளியிடப்பட்டது. வெவ்வேறு காலத்தில் பிரசுரிக்கப்பட்டிருந்த நல்ல நூல்களில் காணப்பட்ட முன்னுரைகளை தேடி எடுத்துத் தந்தது தீபம். அவற்றின் சிறப்பும் தனித்தன்மையும் கருதியே அவை மறு பிரசுரம் பெற்றன.

முதல் முதலாக, லா. ச. ராமாமிர்தம் 'புத்ர' நாவலில் எழுதியிருந்த முன்னுரை வெளியிடப்பட்டது. பின்னர் தொடர்ந்து வெளிவந்தவை - சுந்தர ராமசாமி 'பிரசாதம்' கதைத் தொகுதியில் எழுதிய முன்னுரை; வ. ரா.வின் 'மழையும் புயலும்' கட்டுரைத் தொகுப்புக்கு ந. பிச்சமூர்த்தி எழுதிய முன்னுரை; கு. அழகிரிசாமி கதைகள்' நூலுக்கு கல்கி எழுதிய முன்னுரை; இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறான வீர. சவர்க்கரின் 'எரிமலை' நூலுக்கு ஜெயமணி சுப்பிரமணியம் எழுதியது; தி. ஜ. ர. சிறுகதைகள் 'நொண்டிக்கிளி' புத்தகத்துக்கு மஞ்சேரி எஸ். ஈஸ்வரன் எழுதியது; 'உன்னைப் போல்ஒருவன்' தொகுப்புக்கு ஜெயகாந்தன் முன்னுரை; எஸ். பொ. சிறுகதைத் தொகுதி 'வீ' யில் வந்த முன்னுரை; அ. சீனிவாசராகவன், நாணல் என்ற பெயரில் எழுதிய கவிதைகளின் தொகுப்பான 'வெள்ளைப் பறவை' க்கு தொ.மு.சி. ரகுநாதன் எழுதியது ஆகியன.

அப்புறம் நீண்ட இடைவெளிக்குப் பிறது, தீபம் 80 வது இதழில் தான் இந்தப் பகுதி தலைகாட்டியது. அப்போது, தனி முன்னுரையாக இல்லாது, 'மூன்று முன்னுரைகள்' என்று வெளியிடப்பட்டது.

1. சிவசங்கரியின் கதைத் தொகுப்புக்கு ஜெயகாந்தன் எழுதியது. 2. ஜி. நாகராஜனின் தொகுப்புக்கு சுந்தர ராமசாமி எழுதியது. 3. அசோகமித்திரன் கதைத் தொகுதிக்கு ஞானக்கூத்தன் எழுதியது.

அடுத்து, 1. பூச்சருகு என்ற தனது நூலுக்கு என். ஆர். தாசன் எழுதியது. 2. புதுக்கோலம் நூலுக்கு கவிதாமணி. 3. சறுக்கு மரம் நாவலுக்கு மலர்மன்னன் எழுதிய முன்னுரை.

இதற்குப் பின் இந்தப் பகுதி இடம் பெறவில்லை. மீண்டும், தீபம் 93 வது இதழில், 'நினைவில் நிற்கும் முன்னுரை' என்று, அசோகமித்திரன் கதைகள் 'இன்னும் சில நாட்கள்' தொகுப்புக்கு எஸ். வைதீஸ்வரன் எழுதிய முன்னுரை பிரசுரமாயிற்று. அதன் பிறகு எதுவும் வரவில்லை.

'ஊஞ்சல் கடிதங்கள்' - ஒரு புதிய இலக்கியப் பாலம் என்றொரு பகுதி தீபம் முதலாவது ஆண்டில் வெளிவந்தது.

ஊஞ்சல் கடிதங்கள என்பதற்கு விளக்கமும் எழுதப்பட்டிருந்தது.

கி. ராஜநாராயணன் விளையாட்டு போல ஒரு 'கடிதப் பத்திரிகை' யை ஆரம்பித்து நடத்தியிருந்தார். ஒரு நோட்டுப் புத்தகத்தில் அவர் சில நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதினார். அதை முதலாவது ஒரு நண்பருக்கு அனுப்பினார். அந்த நண்பர், அனைத்து நண்பர்களுக்குமோ அல்லது ஒன்றிருவருக்குகோ கடிதம் எழுதி அடுத்த நண்பருக்கு அனுப்ப வேண்டும். அவர் தன் விருப்பம் போல் கடிதங்கள் எழுதி இன்னொருவருக்கு அனுப்புவார். கடைசியாக உள்ள நண்பர் கடிதங்கள் எழுதி, அந்த நோட்டை கி. ரா. வுக்கே அனுப்ப வேண்டும். இப்படி அங்கும் இங்குமாக அசைந்து நகர்வதால் அதற்கு 'ஊஞ்சல்' என்ற பெயர் வைக்கப்பட்டிருந்தது. கி. ராஜநாராயணன், கு. அழகிரிசாமி, சுந்தரராமசாமி, தீப. நடராஜன், நா. பார்த்தசாரதி, வல்லிக்கண்ணன், தி.க. சிவசங்கரன், அதில் கடிதங்கள் எழுதியிருந்தார்கள். ரசமான, சுவைமிக்க, ரகம் ரகமான கடிதங்கள்.

தீபம் அத்தனை கடிதங்களையும் பிரசுரிக்கவில்லை. கி. ராஜநாராயணன் கு. அழகிரிசாமி இருவரும் எழுதிய இரண்டு கடிதங்களை முதலில் வெளியிட்டது. அடுத்து 'ஊஞ்சல்' நோட்டில் இல்லாத கடிதம் ஒன்றை - புதுமைப்பித்தன் ரகுநாதனுக்கு எழுதியதை - பிரசுரித்தது.

அதன் பிறகு, வல்லிக்கண்ணனும் தி.க. சிவசங்கரனும் தங்களுக்குள் எழுதிக் கொண்ட 'ஊஞ்சல்' கடிதங்கள் இரண்டை அச்சிட்டது.

பின்னர், கி. ரா., கிருஷ்ணன்நம்பிக்கு எழுதிய கடிதம் ஒன்றை வெளியிட்டது. அவ்வளவு தான்.

'திரும்பிப் பார்க்கிறோம்' என்று ஒரு பகுதி சில இதழ்களில் இடம் பெற்றுள்ளது.

பழைய இலக்கியப் பத்திரிகைகளிலிருந்து சில முக்கிய அம்சங்கள் மறுபிரசுரம் செய்யப்பட்டன.

சுந்தா 'மணிக்கொடி' இதழில் எழுதிய 'கதையும் கதாரசிகர்களும்' என்றொரு கட்டுரை வந்துள்ளது. பிறகு, க.நா.சு. நடத்திய 'இலக்கிய வட்டம்' இதழ்களிலிருந்து இரண்டு கட்டுரைகள் -

1. கன்னட ஆசிரியர் கோபால கிருஷ்ண அடிகா எழுதிய 'இலக்கிய ஆசிரியனும் அரசாங்க ஆதரவும்' என்பது.

2. 'அறிமுகம்' - அறிவு சம்பந்தமான துறைகளைச் சேர்ந்த இளம் தலைமுறையினர் பற்றிய கட்டுரை.

'காலத்தை வென்ற சிறுகதைகள்' என்று, வெவ்வேறு காலகட்டத்தில் வெளிவந்த அபூர்வமான சிறுகதைகளை கண்டெடுத்து வழங்க முன்வந்தது தீபம்.

முதலாவதாக சுவாமிநாத ஆத்ரேயன் சிறுகதை 'ராமா நீயெட' பிரசுரமாயிற்று. அடுத்து வரிசையாக வந்தவை:

ப. ஸ்ரீனிவாசன் எழுதிய 'திருமணம்', எம். வி. வெங்கட்ராமின், 'கோடரி', வல்லிக்கண்ணனின் 'பெரிய மனுஷி', கு. அழகிரிசாமியின் 'வெந்தழலால் வேகாது'.

தொடர்ந்து இத்தலைப்பில் சிறுகதைகள் பிரசுரம் பெறவில்லை.

'ஆறங்கம்' என்றொரு பகுதி.

ஒரு பிரச்சினையைக் கூறி, அத்துறை சம்பந்தப்பட்ட ஆறு பேர்களிடம் கருத்து கேட்டு, வெளியிடுவது.

முதலில், தமிழில் புத்தக வெளியீட்டுத்துறை எழுத்தாளர்களுக்கு லாபமாக அமைய நீங்கள் சொல்லும் யோசனைகள் என்ன?

ஆர்வி, கி. ராஜநாராயணன், அ. மு. பரமசிவானந்தம், சாண்டில்யன், ராஜம் கிருஷ்ணன், க. சோமசுந்தரம் யோசனைகள் கூறியிருந்தார்கள்.

பத்திரிகை நடத்திய அனுபவம் பற்றி வாசவன், விந்தன், சாவி, ஜி. உமாபதி, விஜய பாஸ்கரன், அழ. வள்ளியப்பா கருத்து தெரிவித்துள்ளனர்.

கல்லூரி மாணவர்களின் இலக்கிய ஈடுபாடுகள் குறித்து ஆறு மாணவர்கள் எழுதியிருந்தார்கள். பத்திரிகை நிருபர் அனுபவங்கள் பற்றி நிருபர்கள் அறுவர் கூறியிருந்தனர்.

தமிழ் மேடை நாடக வளர்ச்சி பற்றி தி. க. சண்முகம், எஸ். வி. சகஸ்ரநாமம், கே. பாலச்சந்தர், ஜி. முத்து, என். சி. செளந்தரவல்லி, கே. எஸ். நாகராஜன் -

பத்திரிகைத் துறை ஓவியம் பற்றி வி. ரங்கநாதன் (மாருதி), எஸ். பாலு, நாராயணசாமி (சித்ரலேகா), அமுதோன், மணி, லோகநாதன் (மணியன் செல்வன்)

புத்தக பத்திரிகை விற்பனையாளர்கள் குறித்து கோவை வேலாயுதம், திருச்சி ஹாஜா மொகைதீன், மதுரை ஜி.வெங்கட்ராமன், சென்னை பீதாம்பரம், பரமசிவம், சுவாமிக்கண்ணு -

கவிதை பற்றி சுரதா, கொத்தமங்கலம் சுப்பு, எஸ். வைதீஸ்வரன், பொன்னடியான், பரந்தாமன், மின்னூர் சீனிவாசன் -

மொழி பெயர்ப்பாளர் அனுவம் பற்றி த. நா. குமாரசுவாமி, சரஸ்வதி ராம்னாத், துளசி ஜெயராமன், பி.வி. சுப்பிரமணியம், கே. எம். ரங்கசாமி, செளரி -

பள்ளி ஆசிரியர்கள் பற்றி பிச்சுமணி, சுப.கோ. நாராயணசாமி, அழ. கிருஷ்ணமூர்த்தி, எஸ்.கருப்பையா, புலவர் கல்லை ஆ.துரை, புலவர் பொன்னரசன் -

இவ்விதம் பல்வேறு பிரச்சினைகளும் கவனிக்கப்பட்டுள்ளன. சங்கங்கள் மூலம் நற்பணி, நூலகர் பணி, தமிழ்க் கல்லூரிகள் குறித்தும் ஆறு ஆறு பேர் அபிப்பிராயம் கூறியிருக்கிறார்கள்.

'அஞ்சறைப் பெட்டி' என்று ஒரு பகுதி.

'இலக்கியத் தாளிப்பான அபிப்பிராயங்களை' தந்தது இந்தப் பகுதி. இதைத் தயாரித்தவர் சே. சேவற்கொடியோன்.

அண்மையில் நீங்கள் பத்திரிகைகளில் படித்த தமிழ்ச் சிறுகதைக ளில் உங்களது நினைவில் பசுமையாக நிலைத்து வாழும் சிறுகதை பற்றிச் சொல்லலாமா என்பது கேள்வி.

இதற்குப் பதில் அளித்தவர்கள்: கலாப்ரியா, ஆர் நடராஜன், திருமதி எஸ். ஜோதி. சுப. செல்வம், இரா. மீனாட்சி.

இவ்வாறு விதம் விதமான கேள்விகளுக்கு அஞ்சு பேர் பதில் அளிப்பதனால் அது 'அஞ்சறைப் பெட்டி' ஆயிற்று.

தமிழில் வெளிவரும் சிற்றிதழ்கள் பற்றி: இந்த நூலகப் பணி உங்களுக்கு என்னென்ன அனுபவ நிறைவைத் தருகிறது? (சென்னை லெண்டிங் லைபிரரி உரிமையாளர்கள் ஐவரிடம் கேட்கப் பட்டது.)

அரசியல்வாதிகளுக்கு பத்திரிகைகள், நாவல்கள், தமிழில் உள்ள இலக்கிய ஆர்வம் பற்றி -

சமீப காலத்தில் வெளியான கவிதைத் தொகுதிகளில் நீங்கள் விரும்பிப் படித்த புத்தகம் -

நியூவேவ் கதைகள், திரைப்படங்கள் பற்றி என்ன நினைக்கிறீர் கள்?

பத்திரிகைக் கதைகள், நாவல்கள் பற்றி சினிமாக் கதை எழுத்தா ளர்களின் கருத்து.

உங்களை மிகக் கவர்ந்த மேற்கோள் எது?

இன்றைய இலக்கியப் போக்குகள் பற்றி-

உங்களைக் கவர்ந்த கதாபாத்திரம்?

பார்த்து ரசித்த ஏதாவது ஒரு திரைப்படம் பற்றி.

தொழில் வர்த்தகப் பிரமுகர்களிடம்: புத்தகம் பத்திரிகை படிப்ப துண்டா? சிறுகதை, நாவல் பற்றி உங்கள் கருத்து என்ன?

இந்த விதமாக அனைத்து விஷயங்களும் 'தாளிக்கப்பட்டன' என்று சொல்லலாம்.

# 11. விவாதங்கள் சர்ச்சைகள்

இலக்கிய விவாதங்களும், கருத்துப் போர்களும் இலக்கியப் பத்திரிகைக்கு உயிர்ப்பும் உத்வேகமும் அளிக்கும். 'இலக்கியச் சண்டைகள்' சில பத்திரிகைகளுக்கு விசேஷ கவனிப்பு பெற்றுத் தந்திருக்கின்றன. விவாதத்தில் ஈடுபடுகிற - பங்குபெறுகிற - இலக்கியவாதிகளை பொறுத்து அமையக் கூடிய விஷயம் அது.

தீபம் இதழிலும் இலக்கிய விவாதங்கள் தேவை எனக் கருதிய நா. பா. அதற்கான களம் அமைத்துக் கொடுத்தார்.

தமிழ்ச் சிறுகதைகள் பற்றிய கருத்துக் கட்டுரைகள் பிரசுரிக்கப் பட்டன. தமிழ்ச் சிறுகதைகளின் பொற்காலம் இது என்று கு. அழகிரி சாமி ஆறு பக்கங்களில் விவரித்திருந்தார்.

தமிழ்ச் சிறுகதை வளரவில்லை. குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய ஒரு சிலர் தான் நல்ல சிறுகதைகள் எழுதியிருக்கிறார்கள் என்று க.நா. சுப்பிரமணியம் ஆறு பக்கங்களில் கருத்த அறிவித்தார்.

இந்த விவாதம் 'பட்டி மன்றம்' என்ற தலைப்பில் 1967 ஏப்ரல் இதழில் ஆரம்பமாயிற்று...

இன்று உலகம் முழுவதிலும் உள்ள எழுத்தாளர்கள் எழுதும் கதைகளுக்கு இணையாக - சிலசமயங்களில் அந்தக் கதைகளையும் விடச் சிறந்த - கதைகளைத் தமிழ் எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். தலை சிறந்த தமிழ் எழுத்தாளர்களுக்கு இணை சொல்லக் கூடிய சிறுகதை ஆசிரியர்கள் மற்ற இந்திய மாநிலங்களில் இல்லை.

தமிழ்நாட்டின் தலை சிறந்த சிறுகதை ஆசிரியர்கள் என்று புதுமைப்பித்தன், சுந்தரராமசாமி, ஜெயகாந்தன், ஜானகிராமன், ஆகிய நால்வரையும் நான் கருதுகிறேன். நான் படித்த அளவில் நல்ல பல அல்லது சில சிறுகதைகள் எழுதியிருப்பவர்கள் சிதம்பர சுப்ரமணியன், ப. ஸ்ரீனிவாசன், கிருஷ்ணன் நம்பி, ராஜம் கிருஷ்ணன், சிற்சில நல்ல அம்சங்களைக் கொண்ட கதைகளை - பத்திரிகைகளில் வெளி

வந்தால் நான் ஒதுக்கிடவிடாமல் படிக்க விரும்பும் கதைகளை எழுது கிறவர்கள். நா. பார்த்தசாரதி, ரகுநாதன், ஆ. மாதவன், ம. ராஜாராம், பி.எஸ். ராமையா, க. நா. சுப்பிரமணியம்.

தமிழ்ச் சிறுகதைப் படைப்புத் துறையில் இப்போதோ சமீபத் திலோ தேக்கம் எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. துரிதமாக வளர்ச்சி யும் முன்னேற்றமும் ஏற்பட்டிருக்கின்றன. நல்ல எழுத்தாளர்களின் எழுத்துக்களைப் போற்றி, அதே சமயத்தில் பம்மாத்துப் பண்ணுகிற வர்களின் எழுத்துக்களைப் புறக்கணிக்கும் அளவுக்குப் பத்திரிகைக ளிடத்திலும் வாசகர்களிடத்திலும் நல்ல மாறுதலும் விழிப்பும் சிறிது சிறிதாக ஏற்பட்டு வருகின்றன. எனவே இதைத் தமிழ்ச் சிறு கதைக ளின் பொற்காலம் என்று நான் கூறுகிறேன்.

ஏனென்றால், தமிழ் நாட்டைப் போல் இரு மடங்கு மும்மடங்கு ஜனத் தொகையைக் கொண்ட வெளிமாநிலங்களிலும், வெளிநாடுக ளிலும் - நூற்றுக்கு நூறு படித்தவர்களைக் கொண்ட நாடுகளில் கூட - ஒரு தலைசிறந்த கதாசிரியர் இல்லாதிருக்கும் போது, தமிழ் நாட்டில் இன்று மூன்று தலைசிறந்த சிறுகதை எழுத்தாளர்கள் இருக்கிறார்கள் அல்லவா?

கு. அழகிரிசாமி கட்டுரையின் சாரம் இது.

'தமிழில் வெற்றி பெற்றவர்கள் ஒரு நால்வரே' என்று க. நா. சு. எழுதிய கட்டுரையின் முக்கியக் கருத்து.

சிறுகதை என்பது கவிதை போலவே ஒரு பவித்திரமான (சமயச் சார்பற்ற அர்த்தத்தில்) தெய்வீகமான ஒரு உதயம். ஆயிரக்கணக் கான சிறுகதைத் தொழிலாளிகளில் கலைஞர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் நூறு பேர் கூட இராது. உலக இலக்கியப் பரப்பிலே, ஐம்பது பேர்கள் தேறலாம். அந்தத் தரமான உருவத்தை தமிழில் சிருஷ்டிக்க முயன்று வெற்றி பெற்றவர்கள் என்று ஒரு நால்வரைக் குறிப்பிடலாம். (புதுமைப்பித்தன், மௌனி, கு.ப. ராஜகோபாலன், லா.ச. ராமாமிர்தம்). இந்த அளவில் பிற இந்திய மொழிகளில் சிறு கதைகள் வளர்ந்திருக்கின்றனவா என்று கேட்டால், என் படிப்புக் கெட்டிய வரையில், பல இந்திய மொழிக் கதைகளைப் படிப்பவன் என்கிற ஆதாரத்துடன், இல்லை என்று தான் சொல்லுவேன்.

இரண்டாவது வரிசையாக நான் குறிப்பிடும் பத்துப் பன்னிரண்டு ஆசிரியர்களின் தரத்துக்கு சிறுகதை வளர்ந்திருக்கிறது. (ந. பிச்சமூர்த்தி, சி.சு. செல்லப்பா, ந. சிதம்பரசுப்பிரமணியன், த.நா. குமாரசுவாமி, தி.ஜ. ரங்கநாதன், கு. அழகிரிசாமி, தி. ஜானகிராமன், ஜெயகாந்தன், சுந்தர ராமசாமி).

ஆனால், சாப விமோசனம், பாற்கடல். பிரபஞ்சகானம் போன்றவற்றுடன் வைத்துப் பார்க்கக் கூடிய கதைகள் வேறு இந்திய மொழிகளில் இன்னும் உண்டாகவில்லை என்று தான் சொல்ல வேண்டும். (க.நா.சு. கட்டுரையிலிருந்து)

இவ்விருவரின் அபிப்பிராயங்களை ஆதரித்தும் எதிர்த்தும் பலர் கருத்துக்கள் எழுதியிருந்தனர். மே மாத இதழில், பொற்காலம் தான் என்ற நோக்கில் மா.பா. குருசாமி, எம். கே. மணிசாஸ்திரி இருவரும் கருத்து தெரிவித்தனர். பொற்காலம் அல்ல என்று சரத்கமலன் எழுதினார். அழகிரிசாமியும் இலக்கிய விமர்சனமும் என்று நகுலன் விரிவாக கட்டுரையும் 'குறைவும் நிறைவும்' என்று கு.அ., க.நா.சு. கட்டுரைகளை விமர்சித்து ஆர்வியும் கட்டுரை எழுதியுள்ளனர் பத்துப் பக்கங்களில்.

ஜுன் மாத இதழில் எழில் முதல்வன், வை. ரங்கநாதன், சித்திரபாரதி, வெ. சாமிநாதன், இந்திரா பார்த்தசாரதி, யா. இராயப்பன், விவாதத்தை வளர்ந்திருந்தார்கள். அவை 17 பக்கங்களில் பரவியிருந்தன.

பட்டிமன்ற எதிரொலி என்று தொடர்ந்து சில இதழ்களில் பல எழுத்தாளர்களின் கடிதங்கள் இடம் பெற்றன. இலங்கையிலிருந்து இக்பால், மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளைக் குறிப்பிட்டு கோலாலும்பூர் சை. பீரமுகம்மது, மற்றும் சுப. கோ. நாராயணசாமி, சுவாமிநாத ஆத்ரேயன், சா. நாகலிங்கன், மகரிஷி, முருகசரண், விவேகானந்தன், த. பன்னீர் செல்வம், குமுதன், ரா. சுவாமிநாதன், எஸ். ஏ. சவால், கே. எஸ். சிவகுமாரன் (இலங்கை), பூதலூர் முத்து ஆகியோரின் கருத்துக்கள் பிரசுரம் பெற்றுள்ளன.

பட்டி மன்றத்தில் பலரும் பங்கு பற்றினார்கள் என்ற திருப்தி ஏற்பட்டிருந்தது. தொடர்ந்து வெவ்வேறு பொருள்கள் பட்டி மன்ற விவாதத்துக்கு முன் வைக்கப்பட்டன.

'தமிழில் நாடகம் வளர்ந்திருக்கிறதா? வளரவில்லையா? என்பது இரண்டாவது விவாதம்.

வளர்ந்திருக்கிறது என்று கூறிய எம். கே. மணி சரஸ்வதி கட்டுரையும், வளரவில்லை என்று தி. க. சிவசங்கரன் எழுதிய கருத்தும் இடம் பெற்றன.

வளர்ந்துள்ளது என்று எஸ். வி. சகஸ்ரநாமம் எழுதினார். கலை வளர்ந்திருக்கிறது; ஆனால் நாடக இலக்கியம் வளரவில்லை என்று கோ. கி. ராசாராம் அபிப்பிராயம் கூறினார்.

வளர்ந்திருக்கிறது என்ற நோக்கில் சு. விசுவநாதன், சாம்பு எஸ். நடராஜன், எஸ். வைதீஸ்வரன் கருத்துக்களும், வளரவில்லை என்று ச. செந்தில் நாதன், ப. லட்சுமணன், என். ஆறுமுகம், வெ. சாமிநாதன் கருத்துக்களும் தொடர்ச்சியாக இடம் பெற்றன.

தமிழில் நாடகம் படிப்படியாக வளர்ந்திருக்கிறது என்று கோமல் சுவாமிநாதன் ஒரு கட்டுரை எழுதினார். 'தமிழில் நாடகங்கள்' என்று பி. எஸ். ராமையா ஒரு சிறப்புக் கட்டுரை எழுதினார் அத்துடன் விவாதம் முற்றுப் பெற்றது.

பாரதிக்குப் பின் தமிழ்க் கவிதை வளர்ச்சி பற்றிய விவாதம் மூன்றாவதாக முன் வைக்கப்பட்டது.

கவிதை வளர்ந்திருக்கிறது என்று ராஜாத்தி கட்டுரையும், வளரவில்லை எனும் வளர்வோன் கட்டுரையும் வெளியிடப்பட்டன. இந்த விவாதத்திலும் பல எழுத்தாளர்கள் கலந்து கொண்டார்கள்.

இ. ஆறுமுகம், நாஞ்சில் மூர்த்தி, சி. தில்லை நாதன், மணிமாறன், தமிழ்நாடன், என். கலியபெருமாள், ரா. ரமணன் 'வளர்ந்திருக்கிறது' என்று அறிவித்தார்கள்.

மா.பா. குருசாமி, விரோதி, கோ. முருகன், ஈழத்துத் தமிழ்ப் பேராசிரியர் கலாநிதி க. கணபதிப்பிள்ளை, குமாரி கமலா நீலகண்டன், டி.ஆர். நடராசன், புலவர் இராமமூர்த்தி ஆகியோர் 'தமிழ்க்கவிதை வளரவில்லை என வாதிட்டார்கள்.

நான்காவதாக, தமிழ் நாவல் இலக்கியம் பற்றிய விவாதம். தமிழ் நாவல் வளர்ந்திருக்கிறது என்று எழில் முதல்வன் கட்டுரை

எழுதினார். கே. சுவாமியின் 'வளரவில்லை' என்ற கட்டுரை மறுப்பு கூறிற்று.

வளர்ந்திருக்கிறது என்று கோவி. பரஞ்சோதி கருத்து தெரிவித்தார். சித்திர பாரதி வளரவில்லை என்று வாதாடினார்.

வளரத் தொடங்கியிருக்கிறது என்று இரவீந்திரநாத் ஆறுமுகம் அபிப்பிராயப்பட்டார். பெருக்கம் உண்டு; ஆனால் வளம் இல்லை என்று சு. சங்கர சுப்ரமண்யன் அறிவித்தார்.

வளர்ந்திருக்கிறது என்ற நோக்கில் யா. ராயப்பன், சிவமுருகள் - வளரவில்லை என்று சுப. கோ. நாராயணசாமி, சு. அரங்கராசன் எண்ணங்களும் வெளிவந்துள்ளன.

அடுத்ததாக, தமிழில் விமர்சனம் பற்றிய பட்டி மன்றம் இடம் பெற்றது.

வளர்ந்திருக்கிறது என்ற கருத்தை சு. சங்கர சுப்ரமண்யன் முன் வைத்தார். விஜயசுந்தரம் அதை மறுத்து விமர்சனம் வளரவில்லை என்று கூறினார்.

கலகக் கண்ணன், யா. ராயப்பன், எஸ். டி. போஸ், சு. அரங்கராசன் ஆகியோர் வளர்ந்திருக்கிறது என்றும், வி. பாலு, தமிழவன், அம்பைபாலன், ஸ்ரீலித்யா, மு. வேலாயுதம் ஆகியோர் வளரவில்லை என்றும் அபிப்பிராயம் தெரிவித்தார்கள்.

அத்துடன் சரி. அதன்பிறகு 'பட்டிமன்றம்' தலைகாட்டவில்லை.

தீபம் இலக்கிய விவாதங்களுக்கு இடமளிப்பதில் ஆர்வம் காட்டி வந்திருக்கிறது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

எதிர்காலத் தமிழ்க்கவிதை எப்படி இருக்க வேண்டும் என்றொரு கட்டுரையை மீ.இராசேந்திரன் (கவிஞர் மீரா) ஒரு சமயம் தீபத்தில் எழுதினார்.

அதன் மீது ஞானக்கூத்தன் தனது அபிப்பிராயங்களை வெளியிட்டுள்ளார். நா. ஜெயராம் கட்டுரையும் பிரசுரமாயிற்று. தொடர்ந்து த. கோவேந்தன், விசுவநாதன் அவரவர் எண்ணங்களை எழுதினார்கள்.

'இன்றையக் கவிதை' என்று நா. காமராசன், கருத்தும் வெளிவந் தது. மேலும், தமிழன்பன், எஸ். பி. சுசீலா, பாரவி, சேவற்கொடி யோன், மன்னை இனமதி காந்தன் எதிரொலியாகக் குரல் எழுப்பி யுள்ளனர்.

மற்றொரு சந்தர்ப்பத்தில், தற்காலத் தமிழ் இலக்கியம் பற்றிய கருத்துக்கள் விவாதிக்கப்பட்டுள்ளன. அமெரிக்காவிலிருந்து வந்த டாக்டர் ஆல்பர்ட் ஃபிராங்க்ளின், சென்னை இலக்கியச் சிந்தனை சிறப்புக் கூட்டத்தில், தற்காலத் தமிழ் இலக்கியம் பற்றி ஒரு கட்டுரை வாசித்தார். தமிழ் இலக்கியம், எழுத்தாளர்கள் குறித்த அவரது அபிப் பிராயங்களைக் கூறிய அந்தக் கட்டுரை, 'விண்வெளியிலிருந்து சில கருத்துக்கள்' என்ற தலைப்பில் தீபத்தில் பிரசுரமாயிற்று.

விவாதத்துக்குரிய அக்கட்டுரையின் எதிரொலியாக சி.சு. செல் லப்பா ஒரு கட்டுரை எழுதினார். சேவற்கொடியோன், அம்பைபா லன் ஆகியோரும் தங்கள் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

வேறொரு சமயம், டாக்டர் தா.வே. வீராசாமி 'தமிழில் முதல் தேசிய நாவல்' என்ற கட்டுரையை தீபத்தில் எழுதினார். திரிசிரபுரம் வை. குருசாமி சர்மா எழுதிய 'பிரேம கலாவதீயம்' என்ற நாவல் தான் தமிழின் முதல் தேசிய நாவல் என்று கூறி, அதைப் பற்றி விரிவாக எழுதியிருந்தார் அவர்.

அது சரியல்ல, பிரேம கலாவதீயம் தமிழின் முதல் தேசிய நாவல் இல்லை என்றும், அசன்பே சரித்திரம் எனும் இலங்கைத் தமிழ் நாவல் தான் முதலாவது என்றும் பெ. கோ. சுந்தரராஜன் - சோ. சிவபாதசுந்தரம் விவாதித்திருந்தனர்.

இது பற்றி மேற்கொண்டு எவ்விதமான தகவலும் வெளிவர வில்லை.

முதல் தமிழ் நாவல் என்ற சிறப்பைப் பெற்றுள்ள மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய 'பிரதாப முதலியார் சரித்திரம்' நாவலை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருத்திய பதிப்பாக வெளியிட்டது. அதில் உள்ள வடமொழிச் சொற்களைத் திருத்தி, தூய தமிழ்ச் சொற்களைப் புகுத்தி 'வேண்டாத வேலை' (தேவையில்லாத திருப்பணி) செய்திருந்தது பதிப்பகம்.

இதைக் கண்டித்து, ல. வெங்கட்ராமன், 'பிரதாப முதலியார் படுகொலை' என்று சூடாக ஒரு கட்டுரை எழுதினார். தீபத்தில் வெளிவந்த 'உரத்த சிந்தனை' யான அதை ஒட்டி பல எழுத்தாளர்கள் சுவையான முறையில் கருத்துக்கள் தெரிவித்து எழுதினார்கள். அவற்றை தீபம் மகிழ்ச்சியுடன் வெளியிட்டது.

மொழிப் பிரச்னை குறித்து - நாட்டின் வளர்ச்சிக்கு முக்கியமானது 'ஆங்கிலமா? பிரதேச மொழியா? என்று கருத்துரைக்கும் படி வாசகர்களைக் கேட்டது தீபம். (அக்டோபர் 1967).

பலர் கட்டுரைகள் எழுதி அனுப்பினார்கள். விநோதன் சாயிராம் எழுதிய 'கல்வி ஒருமைப்பாட்டுக்கு ஆங்கிலம் மிக மிக அவசியம்' என்ற கட்டுரை முதன்மையானதாகத் தேர்வு செய்யப்பட்டது. 'பிரதேச மொழி தான்' எனும் எம். என். நாராயணன் கட்டுரை இரண்டாவதாகவும், 'குழப்பம் தீர வழி' என்று டி.பி. தீத்தாரப்பன் எழுதியது மூன்றாவதாகவும் மதிக்கப் பெற்றன. அவற்றுக்கு உரிய பரிசுகள் வழங்கப்பட்டன.

இதர சில கட்டுரைகளும் பிரசுரம் பெற்றன.

# 12. இலக்கிய விமர்சனம்

இலக்கிய விமர்சன வளர்ச்சிக்கு தீபம் தன்னால் இயன்ற அளவுக்கு ஆதரவு அளித்து வந்திருக்கிறது. இலக்கியப் படைப்புகள், படைப்பாளர்கள் பற்றி ஆழ்ந்த விமர்சன முயற்சிகள் தீபத்தில் இடம் பெறவில்லை என்றாலும், அவ்வப்போது விமர்சனங்களை வாசகர்களிடமிருந்து வரவேற்று பிரசுரிப்பதில் தீபம் ஆர்வம் கொண்டிருந்தது.

ஆரம்பம் முதல் இறுதி வரை புத்தக மதிப்புரைக்காக்க கணிசமான பக்கங்கள் ஒதுக்கப் பட்டன. புதிய புத்தகங்களை அறிமுகம் செய்யும் விதத்தில் 'தீபம்' மதிப்புரைப் பகுதி விளங்கியது. சில சமயங்களில், முக்கியமான சில நூல்கள் பற்றிய விரிவான அறிமுகக் கட்டுரைகள் எழுதப்பட்டுள்ளன.

இலக்கிய விமர்சன வளர்ச்சிக்கு உதவக்கூடிய முறையில் பல கட்டுரைகள் தீபம் வெளியிட்டு வந்தது. சென்னை 'இலக்கியச் சிந்தனை' அமைப்பு ஒவ்வொரு வருடமும் அந்த ஆண்டின் சிறந்த சிறுகதை என்று, இலக்கியச் சிந்தனையின் மாதப் பரிசு பெற்ற பன்னிரண்டு சிறுகதைகளிலிருந்து ஒன்றைத் தேர்வு செய்து பரிசளிப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளது. ஒவ்வொரு வருடமும் பிரபல எழுத்தாளர் அப்படி தேர்ந்து எடுப்பார். தனது தேர்வுக்கான காரணத்தைக் கூறும் வகையில் அவர் அந்த ஆண்டின் பன்னிரண்டு சிறுகதைகளையும் விரிவாக விமர்சனம் செய்வார். அவருடைய கட்டுரை அந்த ஆண்டுச் சிறுகதைகளின் தொகுப்பில் முன்னுரையாக அச்சிடப்பெறும்.

அவ்வித விமர்சனக் கட்டுரைகளை ஆண்டுதோறும் தீபம் ஏற்றுப் பிரசுரம் செய்வதை வழக்கமாக்கியிருந்தது.

தீபம் இதழ்களில் வெளிவரும் சிறுகதைகளை விமர்சனம் செய்து கட்டுரை எழுதும் படி அதன் வாசகர்களை ஊக்குவித்தது. 1970களில் இந்த முயற்சிகளை வரவேற்று உற்சாகப்படுத்தியுள்ளது.

தீபத்தில் வந்த சிறுகதைகள், குறுநாவல்கள் பற்றி வாசக ரசிகர்கள் ஆர்வத்துடன் கட்டுரைகள் எழுதியுள்ளனர். சிறந்த கட்டுரைக்குப் பரிசு வழங்கப்பட்டிருக்கிறது. அத்தகைய விமர்சனக் கட்டுரைகள் குறித்து வாசகர்கள் அபிப்பிராயங்களும் வெளியிடப்பட்டன.

பிறகு தங்களுக்குப் பிடித்த ஏதாவது ஒரு நாவலை விமர்சித்து எழுதும் படி வாசகர்களைத் தூண்டியது தீபம்.

நா.பா. வின் 'சமுதாய வீதி' நாவல் சாகித்திய அகாதமிப் பரிசு பெற்றதும், அந்த நாவல் குறித்த விமர்சனங்களை வாசகர்களிடமிருந்து வரவேற்று, அவற்றில் முக்கியமானவற்றை வெளியிட்டது.

இக்கட்டுரைகள் பலவும் 'நாங்கள் விமர்சிக்கிறோம்' என்ற தலைப்பின் கீழ் பிரசுரிக்கப்பட்டன. ஜெயகாந்தனின் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' நாவல் விமர்சனமும் இவ்வாறு வெளிவந்துள்ளது.

'எனக்குப் பிடித்த சரத்சந்திரர் கதை' என்ற தலைப்பில் விமர்சன் கட்டுரை எழுதி அனுப்பும் படி வாசகர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டனர். அதன்படி வந்த கட்டுரைகள் தீபத்தில் பிரசுரமாயின.

மாணவர்களை விமர்சன முயற்சிகளில் ஈடுபடும்படி தீபம் ஊக்குவித்தது. கு. அழகிரிசாமியின் கதைகள், லா.ச.ரா. கதைகள் பற்றி வந்த விமர்சனக் கட்டுரைகள் தீபத்தில் இடம் பெற்றிருக்கின்றன - 'இரசனை அரங்கம்' என்ற தலைப்பில்.

'பத்தாண்டுகளில் தீபம்' என்று இலக்கிய ரசிகர்கள் விமர்சித்து எழுதியுள்ளனர். திருவனந்தபுரம் இலக்கிய நண்பர்களும், இதர சில இடங்களின் ரசிகர்களும் அங்கங்கே கூடி தீபம் வளர்ச்சியை விமர்சித்திருக்கிறார்கள். அவர்கள் அனுப்பிய விமர்சனங்களையும் யோசனைகளையும் ஏற்று தீபம் வெளியிட்டிருக்கிறது.

# 13: வாசகர் தொடர்பு

வாசகர்களின் அபிப்பிராயங்களுக்கு நா. பா. மதிப்பு அளித்து வந்தார். வாசகர்களின் கடிதங்களை அவர் வரவேற்றார். ரசித்தவற்றைப் பற்றி கடிதங்கள் எழுதும் படி வாசகர்களை அவர் ஊக்குவித்தார். வாசகர்களின் கடிதங்கள் 'சங்கம்' என்ற பகுதியில் இதழ் தோறும் வெளிவந்தன.

'அபிப்பிராயமும் புலமையும் ஒன்று கூடுகிற இடத்துக்குச் சங்கம் என்று பெயர். வாசகர்களின் அபிப்பிராயங்கள் ஒன்று கூடுகிற பகுதிக்கு சங்கம் என்று பெயர் தந்து தனது வாசகர்களின் நயமான கடிதங்களை வரவேற்கிறது தீபம். இந்தப் பகுதி வாசகர்களின் இலக்கிய மேடையாக அமைய வேண்டும் என்பது எங்கள் ஆசை. எல்லாப் பத்திரிகைகளிலும் வருகிற 'made up' கடிதங்கள் போலன்றி, சத்தியமயமான வாசகர்களின் குரல் இங்கு இந்தப் பகுதியில் ஒலிக்க வேண்டுமென விருப்புகிறோம் நாங்கள். தயை கூர்ந்து இந்தப் பகுதிக்கு எழுதும் கடிதங்களில் ஆர்வத்தை மட்டும் அடிப்படையாகக் கொண்டு அபிப்பிராயங்களை வரையாதீர்கள். நியாயத்தையும் சத்தியத்தையும் அடிப்படையாகக் கொண்டு உங்கள் அபிப்பிராயத்தைப் படையுங்கள்' என்று நா. பா. அறிவித்தார்.

வாசகர் கடிதங்கள் தீபம் இதழ்களில் வெளிவந்த விஷயங்களைப் பற்றிய அபிப்பிராயங்களை தெரிவித்ததுடன், பொதுவாகப் பல பிரச்சினைகள் குறித்தும் கருத்து கூறின. சிறுவர் இலக்கியம், கவர்ச்சியும் மலிவும், தமிழ் சினிமா, பத்திரிகைகளின் போக்கு போன்ற பல்வேறு விஷயங்கள் குறித்தும் வாசகர்கள் எழுதினார்கள். சிறந்த கடிதங்களுக்குப் பரிசு வழங்கப்பட்டுள்ளது.

1971-ம் ஆண்டில் தீபம் வாசகர்களுக்கு 'வெண்பாப் போட்டி' வைத்தது. ஈற்றடி கொடுத்து வெண்பா எழுதி அனுப்பும் படி கோரியது.

தற்காலம் வேண்டும் தமிழ், வங்காள தேசத்தை வாழ்த்து, கல்கி வளர்த்த கதை, காசுக்கே விற்றுவிட்டோம் காண், இந்திராவுக்கு உண்டோ இணை? - இவை நா. பா. கொடுத்த ஈற்றடிகள்.

ரசிகர்கள் எழுதி அனுப்பிய வெண்பாக்களில் தகுதி வாய்ந்தவை தீபத்தில் வெளியிடப்பட்டன. இந்தப் போட்டி குறுகிய காலம் தான் நடைபெற்றது.

தமிழ் உணர்வோடும், இலக்கிய ரசனை நோக்கிலும் சங்கம் அமைத்து, கூடி விவாதித்து, நிகழ்ச்சிகள் நடத்துவதில் ஆர்வம் உடையவர்கள் பல ஊர்களிலும் இருக்கிறார்கள். இத்தகைய முயற்சிகளை தீபத்தில் அறிமுகம் செய்து, அவர்களுக்கு உற்சாகமளிக்க முன் வந்தார் நா. பா. அப்படிப்பட்ட அமைப்புகள் பற்றி எழுதும் படி அறிவித்து, அவற்றை 'எங்கள் சங்கம் இது' என்ற தலைப்பில் வெளியிட்டார்.

டில்லி, பம்பாய், கல்கத்தா, நகரங்களிலிருந்து, அந்நகரங்களின் விசேஷச் செய்திகளை நண்பர்கள் எழுதி அனுப்பினார்கள். டில்லி கடிதம், பம்பாய் கடிதம், கல்கத்தா கடிதம் என்று அவை பிரசுரம் பெற்றன. மலேயாக் கடிதம், இலங்கைக் கடிதம் என்றும் வந்தன. அங்கங்கு உள்ள இலக்கிய விசேஷங்களை அறிந்து கொள்வதற்கு இக்கடிதங்கள் உதவின.

தீபம் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்ட வாசக நண்பர்கள் பலர் இருந்தனர். அவர்கள் நா. பா. வுக்கு பல வகைகளில் பெரிதும் உதவினார்கள். தீபம் வளர்ச்சிக்காக ஒரு அர்ப்பணிப்புடன், இரவு பகல் பாராது, தன்னலமின்றி, உழைத்து உதவிய அந்த ரசிக நண்பர்களை நன்றியுடன் பெருமைப்படுத்தி, அவர்களை 'தீபம் இலக்கியக் குடும்பம்' என்று அறிமுகம் செய்தார் நா. பா.

உதகமண்டலம் கிருஷ்ணசாமி, கோவை வேலாயுதம், ஆர். பாலசுப்பிரமணியன், சி. உப்பிலிசீநிவாசன், வழக்கறிஞர் எஸ். இராமசுப்பிரமணியம், கே. வி. கிருஷ்ணன், வெ. குருராஜ், சிந்தாதிரிப் பேட்டை பாலகிருஷ்ணன், வீ. ராஜகோபால், எஸ். எஸ். ராஜன் முதலியவர்களை 'நமது இலக்கியக் குடும்பம்' என்று கவுரவித்து எழுதியுள்ளார் நா. பா.

குவெய்த் வி. வாசு, வார்ஸா - போலந்து டாக்டர் ஆர். எம். சுந்தரம் ஆகியோரையும் 'நமது இலக்கியக் குடும்ப' கீழ் அவர் அறிமுகம் செய்திருக்கிறார்.

சென்னை நகரில் நடைபெற்ற இலக்கிய நிகழ்ச்சிகள் பற்றி எழுதுவதற்காக தீபம் 50 வது இதழ் முதல் 'இலக்கிய நாட்குறிப்பு' என்ற பகுதி வந்தது. நா. பா. கலந்து கொண்ட நிகழ்ச்சிகளையும், வேறு முக்கிய இலக்கிய நிகழ்ச்சிகளையும் பற்றி இது அறிவித்தது.

# 14. பிறமொழி இலக்கிய அறிமுகம்

இந்திய மொழிகளின் இலக்கியங்களை தமிழ் வாசகர்களுக்கு அறிமுகம் செய்வதில் நா.பா. மிகுந்த நாட்டம் கொண்டிருந்தார். பிறமொழிச் சிறுகதைகள், குறுநாவல்களின் தமிழாக்கத்தை தீபம் மகிழ்ச்சியுடன் வெளியிட்டு வந்ததையும், இந்திய இலக்கியப் படைப் பாளிகளின் சந்திப்புகளை பிரசுரித்ததையும் முன்னரே குறிப்பிட்டி ருக்கிறேன்.

சுதந்திரத்துக்குப் பின் இந்திய இலக்கியங்களின் நிலை குறித்த விரிவான கட்டுரைகளையும் தீபம் வெளியிட்டது. வங்கம், மலையா ளம், தெலுங்கு, பஞ்சாபி, உருது, உடியா ஆகிய மொழிகளின் இலக்கியங்கள் பற்றிய கட்டுரைகள் பிரசுரம் பெற்றுள்ளன. பிறமொழீ நாவல்கள் சிலவற்றைப் பற்றிய அறிமுகக் கட்டுரைகள் அவ்வப் போது தீபத்தில் வந்துள்ளன.

கே. ஏ. அப்பாஸின் 'அஜந்தா' நாவல் பற்றிய கட்டுரை வெளியி டப்பட்டது. விபூதிபூஷன் வந்த்யோபாத்யாயரின் 'ஆரண்யக' (வன வாசம்) நாவல் பற்றி வெ. குருராஜ் கட்டுரை எழுதியுள்ளார்.

குஜராத்தி ஆசிரியர் காகா காலேல்கர், வங்காள நாவலாசிரியர் பங்கிம் சந்திரர் படைப்புகள் குறித்து கட்டுரைகள் வந்துள்ளன.

ராஜாராவின் கதைகள் பற்றி கி. அ. சச்சிதானந்தன் எழுதினார். உபேந்திரநாத் எழுதிய 'அமலா' நாவல் பற்றி ஒரு கட்டுரை வந்தது. தகழியின் 'கயிறு' நாவலை குறிஞ்சிவேலனும், தாகூரின் 'வீடும் வெளியும்' நாவலை பி. வி. சுப்பிரமணியனும் அறிமுகப்படுத்தியி ருக்கிறார்கள்.

இந்திய மொழீ இலக்கியங்களில் காட்டிய ஆர்வத்தையும் ஈடு பாட்டையும் சர்வதேச இலக்கியங்கள் மீது தீபம் கொண்டிருக்க வில்லை என்றே சொல்ல வேண்டும். எனினும், ஆரம்ப வருடங்க

ளில் சர்வதேசப் படைப்பாளிகள் குறித்த அறிமுகக் கட்டுரைகளை யும், பிற்காலத்தில், புகழ்பெற்ற சர்வதேச நாவல்கள் பற்றிய சில கட்டுரைகளையும் தீபம் வெளியிட்டிருக்கிறது.

ஜான் பால் சார்த்ரே, எஸ்ரா பவுண்டு, இயன் ஃபிளெமிங், ஜான் அன்வி, ஆன்டன் செகாவ், ஜார்ஜ் ஆர்வெல், போரிஸ் பாஸ்டர்நாக், கிரகாம் கிரீன், வில்லியம் ஃபாக்னர், ஜான் அப்டைக் ஆகியோர் பற்றிய விரிவான கட்டுரைகளை ஐ. தியாகராஜன் (அசோகமித்தி ரன்) எழுதியுள்ளார். மார்ஷல் மக்னாகன் பற்றி ஆர். சுவாமிநாதன் எழுதியுள்ளார்.

எஸ். எஸ். ராஜன் தான் படித்து ரசித்த பிரபல நாவல்கள் பற்றி கட்டுரைகள் எழுதியுள்ளார். பிரடரிக் ஃபோர்ச்சிக் எழுதிய 'தி ஒடெ சாஃ பைல்', ஆர்தர் ஹெய்லியின் பணவிளையாட்டுக்காரர்கள் ('மணி சேசர்ஸ்'), இர்விங் வாலஸ் நாவல் 'ரகசியப் பத்திரம்' ஆகி யவை அறிமுகம் செய்யப்பட்டிருக்கின்றன.

ஜான் ஸ்டென்பெக் எழுதிய புகழ்பெற்ற நாவலான 'தி கிரேப்ஸ் ஆஃப் ராத்' (சினத்தில் பழுத்த செங்கனிகள்), ஹெர்மன் ஹெஸ் எழுதிய சித்தார்த்தன், ஆல்பர்ட் காமுவின் 'அந்நியன்', கால்ஸ் வொர்த்தியின் 'சொத்து மிகுந்த செல்வர்கள்' நாவல் பற்றிய கட்டுரை களை பி. வி. சுப்பிரமணியன் எழுதியுள்ளார்.

அமெரிக்கக் கவிஞர் வால்ட் விட்மன் பற்றி 'மனிதனைப் பாடிய ஜனநாயகக் கவிஞர்' என்று மலர் மன்னன் எழுதிய கட்டுரையும் வந்துள்ளது.

வைக்கம் முகம்மது பஷீர், கோவிலன், முகுந்தன், புன்னத்தில் குஞ்ஞப்துல்லா ஆகிய மலையாள எழுத்தாளர்கள் 'என் முதல் கதை' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரைகளை குறிஞ்சிவேலன் தமிழில் தந்திருக்கிறார்.

# 15. ஆண்டு மலர்கள் - சிறப்பிதழ்கள்

நா. பா. வின் இலட்சியங்கள் உயர்ந்தனவாகவே இருந்தன. தீபம் ஆண்டு மலர் விஷயத்திலும் அவர் பெரிய அளவிலேயே ஆசைகள் வளர்த்தார். முதலாவது ஆண்டு மலரில் அவர் எழுதி யுள்ள வரிகள் இதற்கு சான்றாகும்.

'நிறைந்த தரத்தோடு இந்த மலரை தமிழர்களுக்கு வழங்குவதில் பெருமைப்படுகிறோம். மலர் நிறையப் படங்களையும் வண்ண வண்ண ஓவியங்களையும் இட்டு பக்க நிரப்பல் செய்யாமல் படிப்ப தற்கு நிறைவாக ஆடம்பரமில்லாது எளிய முறையில் இதை உருவாக் கியிருக்கிறோம். தமிழகத்தில் இலக்கிய வரலாற்றில் மைல்கற்கள் போல் நின்று புகழ் பெறவல்ல பல நல்ல ஆண்டுமலர்களைத் தீபம் எதிர்காலத்தில் படைக்க இருக்கிறது. அந்தப் படைப்புகளுக்கு, முதற் படைப்பான இந்த மலர் ஓர் அடையாளமே ஆகும்' என்று அவர் அறிவித்துள்ளார்.

தீபம் முதல் ஆண்டு மலர் 1966 ஏப்ரல் மாதம் வெளிவந்தது. 'தமிழ் மறுமலர்ச்சி இலக்கியத்துக்குப் பெருமை தேடித்தரும் எல்லா நல்ல எழுத்தாளர்களும் கூடிய வரை இந்த மலரில் எழுதிப் பெருமை சேர்த்திருக்கிறார்கள்' என்று நா. பா. தெரிவித்துள்ளபடி, மலரின் உள்ளடக்கம் மிகச் சிறப்பாகவே அமைந்திருந்தது.

லா.ச.ரா. எழுதிய 'த்வனி', சுந்தரராமசாமியின் 'திரைகள் ஆயி ரம்', எனும் இரண்டு நெடுங்கதைகள். த.நா. குமாரசுவாமி, கு. அழகிரிசாமி, தி. ஜானகிராமன், கிருஷ்ணன் நம்பி, ராஜம் கிருஷ் ணன், ஆர். சூடாமணி, இந்திரா பார்த்தசாரதி, வல்லிக்கண்ணன், கே. ராமசாமி எழுதிய சிறுகதைகள். அந்நாளைய தமிழக முதலமைச்சர் எம். பக்தவத்சலம் கட்டுரை 'பத்திரிகைகளின் சிறப்பான பங்கு', ரா.ஸ்ரீ. தேசிகனின் 'உளஇயலும் இலக்கியமும்', கி. சந்திரசேகரனின் 'உள்ளமும் எழுத்தும்', மற்றும் தி.ஜ.ர., ந. சிதம்பரசுப்பிரமணியன், கே. ஸ்ரீனிவாசன், ஜெயகாந்தன் கட்டுரைகள். திருச்சிற்றம்பல கவிரா யர், மல்லியம் ராஜகோபால், சாலை இளந்திரையன், இளம் பாரதி, வழிப்போக்கன், பரந்தாமன் கவிதைகள் மலரில் இடம் பெற்றுள்ளன.

160 பக்கங்களில், இலக்கியத் தரமான விஷயங்களைக் கொண்ட இம்மலரின் விலை 2 ரூபாய் தான்.

இரண்டாவது ஆண்டு நிறைவின் போதும் தீபம் தனியாக ஆண்டு மலர் தயாரித்து வெளியிட்டுள்ளது. 'ஒவ்வோர் ஆண்டு மலரை உருவாக்கி வெளியிடும் போதும் அடுத்த ஆண்டு மலரை இதை விட இன்னும் சிறந்த முறையில் தயாரிக்க வேண்டும் என்ற ஆர்வமே மேலோங்கி நிற்கிறது. இப்படி வளரும் எங்களது ஆர்வம் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பயன்பட முடியுமானால் அதுவே நாங்கள் பெறும் பயனாக இருக்கும்' என்று நா. பா. குறிப்பிட்டுள் ளார்.

திருச்சிற்றம்பலக் கவிராயர், தமிழன்பன், சிவம் கவிதைகள். கு. அழகிரிசாமி, அசோகமித்திரன், ஆர்.வி. வியார்ஜி, லா.ச.ரா. சூடா மணி, ஆ. மாதவன், தி.சா. ராஜு, ராஜம் கிருஷ்ணன், தி. ஜானகிரா மன், வல்லிக்கண்ணன், கே. ராமசாமி, சார்வாகன் கதைகள். ஜெய காந்தன், ந. சிதம்பர சுப்பிரமணியன், நா. மகாலிங்கம், கி. சந்திரசேக ரன், தி.ஜ.ர. அகிலன், க.நா.சு., இந்திரா பார்த்தசாரதி, சி. கனகசபா பதி, டி.டி. விஜயராகவன், கே.எஸ். ஸ்ரீனிவாசன், கி. கஸ்தூரிரங்கன், கனக. செந்திநாதன் கட்டுரைகள்.

இரண்டு ஆண்டு மலர்களும் இலக்கியப் பிரியர்களுக்கு மனநி றைவு தரும் அருமையான விருந்தாகவே அமைந்திருந்தன. பின்னர், ஆண்டுதோறும் தனியாக மலர் உருவாக்கி வெளியிடுவது சாத்திமில் லாது போயிற்று. ஆயினும், ஏப்ரல் மாத இதழையே அதிகப் பக்கங்க ளுடன், விசேஷமான கட்டுரைகள் கதைகளோடு, வெளியிட்டது தீபம். 'மறுபடியும் மறுபடியும் தமிழ்ப் பெருமக்களுக்கு நாங்கள் நினைவூட்டுவதெல்லாம் நல்ல இலக்கிய ஏடுகளை உரிய காலத்தில் உரிய பிடிவாதத்தோடு ஆதரிக்க வேண்டும் என்பதே' என்று நா. பா. அன்பு வேண்டுகோள் விடுத்துக் கொண்டிருந்தார்.

'நாட்டில் நன்றாகப் படித்தவர்களிடம் கூட ஆழமான அம்சங்க ளும் அழுத்தமான அம்சங்களும் உள்ள இலக்கியப் பத்திரிகைகளை வாசிக்கும் பழக்கம் குறைவாயிருக்கிறது. இந்நிலை மாறவேண்டும்' என்று நா. பா. வலியுறுத்தினார்.

ஆண்டு மலர்கள் தவிர, தீபம் இரண்டு இலக்கிய மலர்களை தயாரித்து வெளியிட்டது. ஒன்று, 1969 மார்ச்சில் வந்த மலேசிய இலக்கிய மலர். மற்றது, 1969 ஜூன் மாதம் வெளியான ஈழத்து இலக்கிய மலர். தீபம் அந்தந்த மாதத்திய இதழ்களே - வழக்கமான

அம்சங்களுடன் கூடவே - மலேசியா மற்றும் ஈழம் சம்பந்தப்பட்ட கட்டுரைகளையும், அங்குள்ள எழுத்தாளர்கள் எழுதிய கதைகளையும் சிறப்பு அம்சங்களாகப் பெற்றிருந்தன.

மலேசிய இலக்கிய மலரில், ரெ. கார்த்திகேசு, ரெசுவப்பா, க. கிருஷ்ணசுவாமி, சை. பீர்முகம்மது, எம். குமாரன், எழுதிய கதைகள் பிரசுரமாயின. சி. கமலநாதன் 'மலேசியாவில் இந்தியத் தொழிலாளிகள்' பற்றியும், சி. வடிவேல் 'குரங்கு ஆண்டு பலன்' என்றும் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

ஈழத்து இலக்கிய மலர், மலேசிய மலரை விட அதிகமாக அந்நாட்டு இலக்கிய விஷயங்களைத் தாங்கியுள்ளது. இலங்கையர்கோன், வ.அ. இராசரத்தினம், டொமினிக் ஜீவா, எஸ். பொன்னுத்துரை, கனக. செந்திநாதன், செ. கணேசலிங்கன், கே. டானியல், எம்.ஏ. ரஹ்மான், இர. சந்திரசேகரன், சிறுகதைகள். மகாகவி, தான்தோன்றிக்கவிராயர், பாலபாரதி, நாவற்குழியூர் நடராசன், திமிலைத்துமிலன், இ. முருகையன், ச.வே. பஞ்சாட்சரம், வித்துவான் க. வேந்தன் கவிதைகள்.

இலங்கை மலைநாட்டுத் தமிழர் - இர. சிவலிங்கம், தமிழுக்கொரு நாவலர் - சி. தில்லைநாதன், இலக்கியம் கற்பித்தல் - கார்த்திகேசு சிவத்தம்பி, கைலாசபதி கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

ஈழத்து வர்ணனைகள் என்று பல எழுத்தாளர்களின் படைப்புகளிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகள் வெளியிடப்பட்டன. செம்பியன் செல்வன், செ. கதிர்காமநாதன், சானா, காவலூர் ராசதுரை, மு. தளையசிங்கம், இ. நாகராஜன், தெளிவத்தை ஜோசப், அ. முத்துலிங்கம், செ. யோகநாதன் ஆகியோரின் எழுத்துக்கள் வர்ணனைப் பக்கங்களில் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு வருடமும், ஆகஸ்ட் மாத தீபம் சுதந்திர தினச் சிறப்பிதழ் ஆகவும், அக்டோபர் இதழ் தீபாவளிச் சிறப்பிதழ் எனவும் வெளியிடப்பட்டன. 1969 அக்டோபர் இதழ் காந்தி நூற்றாண்டுச் சிறப்பிதழாகப் பிரசுரம் பெற்றது.

'நாட்டுக்கும் பண்பாட்டுக்கும் உதவும் நல்ல இலக்கியப் படைப்புக்களை உருவாக்குவதே என்றும் என் நோக்கமாகும்' என்று நா. பா. கூறியுள்ளார். அந்த நோக்கத்தின் சிறப்பான வெளிப்பாடுகளாகவே தீபம் சிறப்பிதழ்கள் ஒளிர்ந்தன.

# 16. நா. பா. வின் பிரயாணங்கள்

தீபம் ஆசிரியர் என்ற தன்மையில் வெளிநாடுகளுக்குச் செல்லும் வாய்ப்புகள் நா. பாவுக்குக் கிட்டின. குறிஞ்சிமலர், பொன் விலங்குநாவல்களின் ஆசிரியர் என்ற முறையில், வெளிநாடுகளில் வசிக்கும் தமிழர்களிடையே நா. பா. வின் பெயர் நன்கு அறிமுகமாகியிருந்தது. அதனாலும், இலக்கியப் பத்திரிகை தீபத்தின் பரவுதலினாலும், அயல் நாடுகளின் தமிழன்பர்கள் நா. பா. வை வரவேற்க ஆவலுடன் இருந்தார்கள்.

1967 ஏப்ரலில் நா. பா. மலேசியா சென்றார். அங்கு பல இடங்களில் நடைபெற்ற இலக்கிய விழாக்களில் கலந்து கொண்டார். அவருடைய மலேசியச் சுற்றுப் பயணத்தை விவரித்து, 'மலேசியாவில் தீபம் ஆசிரியர்' என்று சா. ஆ. அன்பானந்தன் கட்டுரை எழுதினார்.

பிறகு, 1976ல் நா. பா. சோவியத் யூனியன், போலந்து நாடுகளின் பயணத்தை மேற்கொண்டார். ஒன்றரை மாதங்கள் அங்கு பிரயாணம் செய்தார். போலந்திலிருந்து மார்ச் இரண்டாவது வாரம் இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, ஸ்விச்சர்லாந்து, ரோம், எகிப்து, குவெய்த் ஆகிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தார்.

சென்னைக்குத் திரும்பி வந்ததும், தன் பயண அனுபவங்களை நா. பா. தீபம் இதழில் எழுதலானார். அக்கட்டுரைத் தொடர் நான்கு இதழ்களுக்கு மேல் வரவில்லை. அவரது அயல்நாடுகளின் பயணம் குறித்து அவர் எழுதிய கட்டுரைகள் பின்னர் 'கல்கி' பத்திரிகையில் தொடர்ந்து வந்தன. அப்புறம் புத்தகமாக பிரசுரமாயின.

பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறை மலைமீது பூக்கும் குறிஞ்சிமலர் மலை மேல் பூத்திருப்பதாகத் தகவல் கிட்டியது. 'குறிஞ்சி மலர்' நாவலாசிரியர் நா.பா. அந்தப் பூக்கள் மலர்ந்து கிடப்பதை கண்ணாறக் கண்டு மகிழ ஆசைப்பட்டார். ஆகவே 1969 செப்டம்பரில் அ;வர் கோடைக்கானல் போனார்.

அங்கே மலைமீது குறிஞ்சி பூத்துக் கிடக்கம் இடத்தைக் கண்டு பிடிப்பது அவருக்கு சிரமமான அனுபவமாகவே இருந்தது. மலையில் எந்தப் பகுதியில், எந்தப் பள்ளத்தாக்கில் பூத்துக்கிடந்தாலும் சரி,

எப்படியும் அந்த இடம் சேர்ந்து பூக்களைப் பார்ப்பதுடன், நினைவுச் சின்னமாகக் கொஞ்சம் பூக்களைப் பறித்தே தீர்வது என்று உறுதி பூண்டார். அலைந்து திரிந்து முடிவில் வெற்றியும் கண்டார். அந்த அனுபவங்களை 'குறிஞ்சி மலர்ந்திருக்கிறது!' என்ற கட்டுரையாக தீபத்தில் எழுதினார் நா. பா.

அவர் பறித்து வந்த குறிஞ்சி மலர்க் கொத்து ஞாபகச் சின்னமாக தீபம் அலுவலகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தது.

1977ல் நா. பா. வும் முக்கிய எழுத்தாளர்கள் சிலரும் கல்கத்தா சென்றதையும் குறிப்பிட வேண்டும்.

தமிழ் நாவல் நூற்றாண்டு 1977ல் கொண்டாடப்பட்டது. கல்கத்தா தமிழ்ச் சங்கம் நண்பர்களும் அவ்விழாவை கொண்டாட ஏற்பாடு செய்தார்கள். நா. பா. வையும் அவர் நண்பர்களையும் அழைத்தார்கள்.

நா.பா., அசோகமித்திரன், ஞானக்கூத்தன், மு. மேத்தா, சேவற்கொடியோன், நடராஜன், வல்லிக்கண்ணன் 1977 நவம்பரில் கல்கத்தா சென்று ஒரு வாரம் தங்கி விழாவில் கலந்து கொண்டார்கள். விழா சிறப்பாக நடைபெற்றது.

இலக்கிய நண்பர்கள் நவம்பரில் சென்னையிலிருந்து புறப்படும் போதே நல்ல மழை. புயல் வரும் என்று எச்சரிக்கை அறிவிக்கப்பட்டவாறு இருந்தது. புயல் திருவல்லிக்கேணியைத் தாக்கக்கூடும் என்றொரு பயம் நிலவியது.

பயணம் சுகமாகவும் இனிமையாகவுமிருந்தது. நண்பர்கள் சென்ற ரயிலுக்குப் பின்னாலேயே புயலும் பயணம் செய்திருக்கிறது. திருவல்லிக்கேணியை விட்டு விட்டு புயல் ஆந்திரா பக்கம் நகர்ந்துள்ளது. புயல் பற்றியும் அதன் தாக்குதல் குறித்தும் செய்திகளை அறிந்த கல்கத்தா நண்பர்கள் பயந்து கொண்டிருந்தார்கள். நல்ல படியாக வந்து சேர்ந்த இலக்கிய நண்பர்களை உற்சாகத்தோடு பெரும் மகிழ்ச்சியோடும் வரவேற்றார்கள். புயலின் செய்தியையும் அறிவித்தார்கள்.

புயலினால் ரயில் பாதை சேதடைந்திருந்ததால் ரயில்போக்குவரத்து பாதிக்கப்பட்டிருந்தது. ரயில் மீண்டும் ஓடுகிற வரை நண்பர்கள் கல்கத்தாவில் தங்க வேண்டியதாயிற்று. அந்த மாநகரத்தை நன்கு சுற்றிப் பார்க்கக் கூடிய வாய்ப்பு ஆக அது அமைந்திருந்தது.

# 17. ஓர் புதிய சிந்தனை நிறுவனம்

நா. பா. வின் மற்றுமோர் இலட்சிய முயற்சியாக 1969 ஜனவரியில் 'பவர்' எனும் அமைப்பு தோற்றுவிக்கப்பட்டது. இது குறித்து நா. பா. தீபத்தில் எழுதிய விளக்கம் இங்கு முழுமையாகத் தரப்படுகிறது.

இந்த 1969ம் ஆண்டு ஜனவரி முதல் தேதியன்று கவிஞர்கள், இலக்கியச் சொற்பொழிவாளர்கள், எழுத்தாளர்கள், கல்வி நிபுணர்கள், வாசகர்கள், ஆகிய ஐம்பெரும் இலக்கியக் குழுவினரையும் உள்ளடக்கிக் கொண்டு சென்னையில் ஒரு புது நிறுவனம் தோன்றியுள்ளது. மிகப் பெரிய பி. இ. என். போல இந்நிறுவனம் உருவாகியுள்ளது.

கவிஞர்கள் (Poets), சொற்பொழிவாளர்கள்(Orators),எழுத்தாளர்கள் (Writers) கல்வி நிபுணர்கள்(Edicationists),வாசகர்கள்(Readers),என்ற இப்பதங்களின் முதலெழுத்துக்களை ஒன்று சேர்த்து பவர்(Power),என இந்நிறுவனத்திற்குப் பெயர் சூட்டியுள்ளோம்.

'பவர்' எனும் தமிழ்ச் சொல்லுக்கு 'இணைந்து வழங்குதல்' என்று பொருள். Power என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு ஆற்றல் என்று பொருள். மேற்கண்ட துறைகளில் ஆற்றலும் இணைந்து நெருங்கும் தன்மையுள்ளவர்களின் சங்கமாக இது இப்போது தொடங்குகிறது.

இரசிகர்களும் எழுத்தாளர்களும் கவிஞர்களுக்கும் பேச்சாளர்களுக்கும் கல்வி நிபுணர்க்கும் பயன்படும் உயர்தரமான 'ரெஃபான்ஸ் லைப்ரரி' ஒன்றை நடத்துவதோடு, கவிஞராக, எழுத்தாளராக, விமர்சகராக ஆர்வப்படுவோருக்கு முறையான வழிகாட்டும் வகுப்புகள் சிலவற்றை அனுபவமிக்கோரைக் கொண்டு நடத்தும்(Madras School of Modern Literature),திட்டமொன்றும் இந்நிறுவனத்திற்கு உண்டு. கருத்துப் பரிமாற்றம், சுமுகமான கலந்துரையாடல், இலக்கியப் பரிவர்த்தனை, அண்டை மொழியாருடன் உறவு போன்ற நோக்கங்களும் பவருக்கு உண்டு.

'பவர்' எழுத்தாளர் சங்கமாக மட்டும் இயங்காது. நமது சமூக, கலாசார, அறிவு வளர்ச்சிக்கேற்ற துறைகளில் சிந்தனைத் தரத்தை உயர்த்தும் பொதுவான பலதுறை நோக்கங்கள் பவருக்கு உண்டு. கல்வி, நமது ரசனை எல்லாவற்றிலும் சிந்தனைத் தரம் உயரப் பாடுபடுவதற்காகப் 'பவர்' உருவாகிறது.

1.1.69 அன்று மாலை தீபம் காரியாலயத்தில் 'தினமணி' ஆசிரியர் உயர்திரு ஏ.என். சிவராமன் அவர்கள் பவரைத் தொடங்கி வைத்தார். பேராசிரியர் பாஸ்கரன், எம். கோவிந்தன் (மலையாள இலக்கியம்), ஆருத்ரா (தெலுங்கு இலக்கியம்), கு. அழகிரிசாமி, பி. எஸ். ராமையா (தமிழ் இலக்கியம்) ஆகியோர் பேசினார்கள்.

இந்த இலக்கிய நல்லுறவு நிறுவனம் வளரவும், இதில் கலந்து பரஸ்பர நன்மையடையவும் அனைவரும் அழைக்கப்பட்டார்கள். நிர்வாக ரீதியிலும், உறுப்பினர்களை ஏற்பதிலும் பவருக்குச் சில திட்டவட்டமான, கணடிப்பான, வரையறைகள் உண்டு. ஆயினும் தரமான தமிழ் எழுத்து, சுமுகமான உறவு, சிந்தனைத் தரம், பாரதப் பண்பாடு, பரஸ்பர நல்லெண்ணம் இவைகளை நம்பும் மேற்கண்ட ஐந்து பிரிவினரில் எவரையும் பவர் தன்னுடையவராக ஏற்றுக் கொள்ளத் தயங்காது. பவரின் நோக்கங்கள் பெரியவை. பரந்தவை. அந்தப் பெரிய விரிந்த நோக்கங்களுடன் நம்பிக்கையுள்ளவர்கள் இணைந்து நெருங்குகிறார்கள் என்று நா. பா. அறிவித்தார்.

'பவர் கூட்டங்கள் அவ்வப்போது நடைபெற்றன. அனுபவமுள்ள எழுத்தாளர்கள் சிறுகதை, நாவல்கள் பற்றி சொற்பொழிவாற்றினார்கள். பயிற்சி வகுப்புகள் நடத்தப்பட்டன. 1969 மார்ச் 9, 16, 23, 30 தேதிகளில் தமிழச் சிறுகதைகள் பற்றிய 'கோடை இலக்கிய வகுப்புகள்' நடைபெற்றன.

1970 ஜனவரி 17, 18 தேதிகளில் 'பவர்' ஆண்டுவிழா விமரிசையாக நிகழ்ந்தது.

இலட்சிய நோக்குடைய உயர்ந்த, சீரிய முயற்சிகள் போலவே 'பவர்' நிறுவனமும் அற்பாயுளில் இயக்கமற்றுப் போய்விட்டது.

# 18. சில சோதனைகள்

நா.பா. ஆரம்பத்திலேயே தீபம் பத்திரிகையின் விலையை 75 பைசா என்று நிர்ணயித்திருந்தார்.

அகல சைஸில், 80 பக்கங்கள் கொண்ட இதழுக்கு அந்த விலை அதிகம் என்ற கருத்து சிலரிடையே எழுந்தது. 'இது ரயில்வே கைடு இல்லை, குறைந்த விலையில் அதிக பக்கங்கள் தர'! தரமான விஷயங்களைத் தர முற்படும் இலக்கியப் பத்திரிக்கைக்கு இந்த விலை சரி தான என நா. பா. அபிப்பிராயம் தெரிவித்தார்.

ஆரம்பத்திலேயே இப்படி உயர்வாக விலை வைத்து விட்டதனால், இடைக்காலத்தில் காகித விலை அதிகமாகி இதர பத்திரிகைகள் பலவும் விலையை உயர்த்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்ட போதும், தீபம் அதே 75 பைசா விலையிலேயே வந்து கொண்டிருப்பது சாத்தியமாயிற்று. எனினும், பத்திரிகைத்தாளின் விலை மேலும் மேலும் உயர்ந்து கொண்டே போகவும், தீபமும் சிரமங்களை மேற்கொள்ள நேரிட்டது.

இதழின் விலையைக் கூட்டாமல், பத்திரிகையின் பக்கங்களை குறைத்தது தீபம். அவ்வாறு சில காலம் வெளிவந்தது. காலப்போக்கில் நஷ்டம் அதிகரிக்கவும் இதழின் விலையைக் கூட்ட வேண்டியதாயிற்று.

1974 நவம்பரில் அதாவது தீபம் ஆரம்பித்து ஒன்பதரை ஆண்டுகளுக்குப் பிறகு - 116வது இதழ் முதல் இதழின் விலை ஒரு ரூபாயாக உயர்த்தப்பட்டது.

இருப்பினும் பத்திரிகையை நடத்துவது சிரமமான காரியமாகவே இருந்தது. எந்தப் பத்திரிகையும் நல்லபடியாக நடந்து வளர்வதற்குக் கணிசமான விளம்பர வருமானம் அவசியத் தேவையாகும்.

விளம்பர வருமானம் மிகமிக அதிகமாக, விற்பனை அதிகமுள்ள - வாசகர் எண்ணிக்கையை இலட்சக் கணக்கில் கொண்டிருக்கிற - வணிக நோக்குப் பத்திரிகைகளுக்குத் தான் கிட்டுகிறது. ஒரு நிலைக்கு மேல் வளர்ந்து விட்ட வர்த்தக நோக்கு ஜனரஞ்சகப் பத்திரி

கைகள் 'வேண்டாம் - வேண்டாம்' என்று தவிர்த்த போதிலும், அவைகளுக்கே மேலும் மேலும் விளம்பரங்கள் போய்ச் சேர்கின்றன.

குறைந்த எண்ணிக்கை வாசகர்களைக் கொண்ட இலட்சியப் பத்திரிகைகளுக்கு - அவை என்னதான் உயர்ந்த தரம் உடைய இதழ்களாக இருந்தாலும் - விளம்பரங்கள் சிறிதளவு கூடக் கிடைப்ப தில்லை. அவை வாசகர்களிடையே பரவும் விற்பனையையும் சந்தாக் களையும் நம்பியே வாழ வேண்டியுள்ளது.

இவை தொடர்ந்து கை கொடுப்பதில்லை. இலக்கியப் பத்திரிகை களின் சந்தாதார் எண்ணிக்கை வருடத்துக்கு வருடம் குறைந்து கொண்டு போவதே இயல்பு.

இந்த விதமான சூழ்நிலை காரணமாக, தீபத்தை நடத்துவது நா. பா.வுக்கு பெரும் சோதனையாகவே இருந்தது. பத்திரிகை நடத்துவ தற்குப் பணம் தேடி அவர் அதிகமாக சொற்பொழிவுகள், கருத்தரங்க நிகழ்ச்சிகள், அதிகப்படியான எழுத்து முயற்சிகள் என்று உழைத்தார்.

1979ல் அவருக்கு ஒரு வாய்ப்பு எதிர்ப்பட்டது. தினமணி நிர் வாகம் தங்கள் நிறுவன இதழ்களின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் படி நா. பா. வை அழைத்தது. அவர் தீவிரமாக யோசித்து, அதை ஏற்றுக் கொள்வது என்ற முடிவுக்கு வந்தார். அதனால் தீபத் துக்கு பலம் சேரும்! தீபத்தை விடாது வளர்க்க முடியும் என்பதே நா. பா. வின் இந்தத் தீர்மானத்துக்கு அடிப்படைக் காரணமாக அமைந்தி ருந்தது.

நா. பா., தினமணி நாளிதழ், தினமணிகதிர், சினிமா எக்ஸ்பிரஸ் ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக் கொண்டால், அவர் 'தீபம்' பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பை தொடர்ந்து வகிக்க இயலாது என்ற நிலையில், அவர் ஒரு ஏற்பாடு செய்தார். எஸ். திருமலை 'தீபம்' ஆசிரியர் என்றும், நா. பார்த்தசாரதி -Founder Editorஎன்றும் அறிவிப்பது. வல்லிக்கண்ணன், ஆ. மாதவன், நாஞ் சில் நாடன் மூவரையும் 'ஆசிரியர் குழு' ஆக்குவது என்று நா. பா. தீர்மானித்தார். அவர் விருப்பத்தை நண்பர்களும் அங்கீகரித்தார்கள்.

இந்த ஏற்பாடு 1979 அக்டோபர் முதல் - தீபம் 175 வது இதழிலிருந்து - நடைமுறைக்கு வந்தது.

தீபத்தின் பொருளாதார சிரமங்கள் குறையவில்லை. பொருளா தார சிக்கனம் கருதி பத்திரிகையின் வடிவத்தை மாற்றி அமைக்கத் திட்டமிட்டார் நா. பா.'

17வது ஆண்டில் (ஜனவரி 1982) 'தீபம்' சிறிய அளவு வடிவம் பெற்றது. வழக்கமான 'தீபம்' இரட்டையாக மடிக்கப்பட்டது போல. கிரவுன் 1x4என்று ஆக்கப்பட்டது. 202 வது இதழ் அது. அதில் விளக்கம் அறிவிக்கப்பட்டது.

''புற வடிவம் மாறியிருக்கிறது.

பொருளாதார சிக்கனம் கருதியே இந்த வடிவ மாற்றம் தவிர்க்க முடியாமல் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

வாமன உருவம் கொள்வது விரைவில் விஸ்வரூபம் கொள்ளம் பொருட்டே. பத்திரிக்கையைப் பொறுத்த வரை விஸ்வரூபம் என்பது வெறும் வடிவத்தைப் பொறுத்ததில்லை. உள்ளடக்கத்தையும் பொறுத் ததே.

கடுகு சிறுத்தாலும் காரம் மட்டும் போவதில்லை. பல்லால் கடித் தால் நாக்குப் பதறுகிற அளவிலான ஊசிமிளகாய்க் காரம் தீபத்தில் இன்னும் அதிகமாகப் போகிறது. காரம் மட்டுமல்ல - சாரமும் கூட மிகமிக அதிகமாகும் என வாசகர்கள் உள்ளடக்கம் நிறையவே பார்க் கலாம்.'

ஆயினும் இந்தக் குறள் வடிவம் எடுபடவில்லை. வாசகர்கள் அதை விரும்பவில்லை. எனினும், ஒன்றரை வருடங்களுக்கும் மேலாக தீபம் சிறிய சைஸிலேயே வெளிவந்தது. மீண்டும், 1983 அக்டோபர் தீபாவளி இதழ் முதல் அது பெரிய அளவில் வரத் தொடங்கியது. அது தீபத்தின் 223வது இதழ் ஆகும்.

# 19. இலட்சியப் பாதையில்

தீபம் கலை, இலக்கிய வளர்ச்சியில் அக்கறை கொண்டிருந்த தைப் போலவே, நாட்டின் தொழில் மற்றும் அறிவியல் துறைகளின் வளர்ச்சியிலும் ஆர்வம் காட்டி வந்தது.

புதிய தொழிலகங்களை தீபம் அறிமுகம் செய்ய முன்வந்தது. வடலூரில் புதிதாக ஆரம்பிக்கப்பட்டிருந்த பீங்கான் தொழிற்சாலை, பி.எஸ்.ஜி. அறக்கட்டளையின் தொழிற்சாலை போன்றவற்றை அறி முகம் செய்து கட்டுரைகள் எழுதப்பட்டன.

சமுதாயத்தில் பல்வேறு துறைகளில் பணிபுரிவோரை தீபம் உற் சாகப்படுத்திப் பாராட்டியது. அவர்களைப் பற்றி ‘பொதுப் பணியில் இவர்கள்’ என்று எழுதி ஊக்குவித்தது. இசைத்துறையைச் சேர்ந்த எஸ். சேதுராமன், விவசாயத்துறை எ. முனிசாமி முதலியார், தொழி லாளர் தலைவர் எஸ். குருமூர்த்தி, புத்தக வெளியீட்டாளர் லட்சுமி கிருஷ்ணமூர்த்தி, கவிஞர் எஸ்.டி. சுந்தரம், சட்டமன்ற உறுப்பினர் மூக்கையாத் தேவர், பாராளுமன்ற உறுப்பினர் எஸ். ராமகிருஷ் ணன், கல்வியாளர் எஸ். ராஜகோபாலன், போக்குவரத்துத் துறை டைரக்டர் டி.வி. வெங்கட்ராமன், பொதுத் தொண்டு புரிந்து வந்த வி. ஆர். ராதாகிருஷ்ணன், உழைக்கும் பத்திரிகையாளர் எஸ். மீனாட்சி சுந்தரம் - இப்படி அநேக சாதனையாளர்களை தீபம் பாராட் டியுள்ளது.

அவ்வப்போது கலை இலக்கிய சமூகப் பிரச்சினைகள் மற்றும் முக்கிய நிகழ்ச்சிகள் குறித்து மனத்தில் தோன்றிய கருத்துக்களை நா. பா. ‘எனது குறிப்பேடு’ என்ற பகுதியில் எழுதி வந்தார். 1974 ஜனவரி இதழிலிருந்து தொடங்கி, மாதம் தோறும் இந்தப் பகுதி தொடர்ந்து வந்தது. நா. பா.வின் மனம் திறந்த அபிப்பிராயங்கள் இப்பகுதியில் பதிவாகியுள்ளன.

தீபம் ஒரே ஒரு முறை ‘சிறுகதைப் போட்டி’ அறிவித்தது. அதன் இருபதாம் ஆண்டு நிறைவை ஒட்டி இந்தப் போட்டி அறிவிக்கப்பட் டது. போட்டிக்கு வந்த கதை சிறுகதைகளை பரிசீலனை செய்து, மூன்று கதைகள் தேந்தெடுக்கப்பட்டன. பரிசு பெற்ற கதைகள் 1985 தீபாவளி மலரில் பிரசுரிக்கப்பட்டன. பரிசு பெற்றவர்கள்-

1. எஸ். சங்கரநாரயணன் - இயேசுவின் சிலுவையை இறக்கி வையுங்கள்!

2. புரசு பாலகிருஷ்ணன் - ஒரு நாய் படுத்தும் பாடு.

3. மோகனன் - காலம் கை கழுவிய பின்.

சிறப்பான முறையில் பரிசளிப்பு விழாவை நடத்தியது தீபம்.

20 ஆண்டு நிறைவுச் சிறப்பு வெளியீடுகள் என்று சிறுகதைத் தொகுப்பு ஒன்றையும், எழுத்தாளர்களின் எழுத்துலக அனுபவங்களைக் கொண்ட கட்டுரைகளின் தொகுப்பு ஒன்றையும் நா. பா. தொகுத்து அளித்தார். தீபத்தில் வெளிவந்த சிறந்த சிறுகதைகளில் 43, 'தீபம் சிறுகதைகள்' என்ற பெயரில் தொகுக்கப்பட்டிருந்தன. 'நானும் என் எழுத்தும்' என்று எழுத்தாளர்கள் தீபத்தில் எழுதியவை கட்டுரைத் தொகுப்பாகப் பதிப்பிக்கப்பட்டிருந்தன.

1987ல் உலகத் தமிழ் மாநாடு மலேசியாவில் நடைபெற்றது. நா. பா. அதில் கலந்து கொண்டார். தமது மலேசியப் பயணத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு சென்னை திரும்பிய நா. பா. விமானத்திலேயே உடல் நலம் குன்றியிருந்தார். உடனடியாக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். சற்று உடல் தேறி அவர் வீடு சேர்ந்தார். எனினும், விரைவிலேயே மீண்டும் அவரை மருத்துமனையில் சேர்க்க வேண்டியதாயிற்று.

நா. பா. 'அமுத சுரபி' இலக்கிய இதழுக்காக தமது சுயசரிதையை எழுத ஒப்புக் கொண்டிருந்தார். முதல் அத்தியாயம் வெளிவந்திருந்தது. அடுத்த மாதத்துக்காக தமது சுயசரிதையின் இரண்டாம் அத்தியாயத்தை, மருத்துவமனையில் படுக்கையில் இருந்தபடியே அவர் எழுதலானார். அப்படி எழுதிக் கொண்டிருக்கையிலேயே திடீரென ஏற்பட்ட மாரடைப்பினால் அவர் உயிர் பிரிந்தது. நா. பா. அமரர் ஆகிவிட்டார். அப்போது அவருக்கு வயது 54.

'தாங்கள் யாரை நம்பியிருக்கிறீர்கள்?' இப்படிக் கேட்ட வாசகர் ஒருவருக்கு நா. பா. அளித்த பதில்: 'சொல்லப் போனால், இப்படி ஒரு கேள்வி கேட்டுக் கொள்கிற அளவு நான் யாரையும் எதையும்

நம்பி இருக்கவில்லை. உழைப்பும் தன்னம்பிக்கையும் விடாமுயற்சி யுமே எனது நினைவில் உள்ளன.

இவ்விதம் மனஉறுதியோடும் தன்னம்பிக்கையோடும் உழைத்து வளர்ச்சிப் பாதையில் வெற்றிகரமாக முன்னேறிக் கொண்டி ருந்த நா. பா. அவரை நம்பியிருந்த குடும்பத்தினரையும் தீபம் பத்திரி கையையும் திடீரென விட்டுப் பிரிந்து சென்றார். இது அனைவருக் கும் ஈடு செய்ய முடியாத இழப்பு தான்.

இலக்கியப் பத்திரிகை தீபத்துக்கும் இலக்கியவாதிகளுக்கும் அவர் மறைவு ஒரு பேரிழப்பேயாகும்.

'தீபம்' 1988 ஜனவரி-பிப்ரவரி இதழ் அமரராகிவிட்ட நா. பா.வுக்கு அஞ்சலி செலுத்தியது. 'நா. பா. இறக்கவில்லை. அவர் எழுத்துக்களில் அவர் வாழ்கிறார். அவர் லட்சியங்களில் அவர் தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பார்' என்று கூறியது.

மார்ச் மாதம் 269வது இதழ் வெளியாயிற்று. அமரராகிவிட்ட எழுத்தாளர் அகிலனுக்கு அது அஞ்சலி செலுத்தியது. 1988 ஜனவரி 31ம் நாள், தமது 66வது வயதில், அகிலன் அமரராகியிருந்தார். எஸ். திருமலை தயாரித்து வெளியிட்ட இந்த இதழில் நா. பா. நினைவுகள் பற்றி எஸ். கிருஷ்ணமூர்த்தி ஒரு கட்டுரை எழுதியிருந்தார். வழக்க மான இதர அம்சங்களும் இடம் பெற்றிருந்தன.

தீபம் 270வது இதழ் ஏப்ரல்-மே என்று குறிப்பிடப்பட்டு வெளி வந்தது. அது தான் இறுதி இதழாக அமைந்து விட்டது. அதற்குப் பிறகு தீபம் வெளிவரவில்லை. தனது இருபத்து மூன்றாவது ஆண்டு நிறைவுடன் தீபம் தன் இயக்கத்தை நிறுத்திக் கொண்டது.

# 20. தீப ஒளி

தீபம் இலக்கிய இதழ் மட்டுமல்ல; தீபம் ஒரு இலக்கிய இயக்கமும் கூட.

இவ்வாறு நா. பா. அடிக்கடி குறிப்பிட்டிருக்கிறார்.

'எழுத்தாளர்களின் உரிமைக்காகவும் நியாயங்களுக்காகவும் இடையறாத போராட்டம் - தீபம் என்ற இலக்கிய யுத்தம்' என்றும் அவர் எழுதியிருக்கிறார். (இதழ். 219. ஜூன் 1983)

இதன் உண்மையை தீபத்தின் பக்கங்கள் - முக்கியமாக, நா. பா. எழுதிய தலையங்கங்கள் - நிரூபிக்கும். நாட்டின் நன்மைக்கும் பண்பாட்டின் உயர்வுக்கும் உதவக்கூடிய சிறந்த விஷயங்களையே தீபம் பிரசுரித்துள்ளது.

பண்பாட்டைச் சிதைக்கும்; வாழ்க்கையின் நலனை சீர்குலைக்கும் நச்சு எழுத்துக்களையும் நசிவுப் போக்குகளையும் வளர்க்கிற பத்திரிகைகளை வன்மையாகத் தாக்கி வந்திருக்கிறது தீபம்.

கால மாறுதல்களையும் கருத்து மாறுதல்களையும் தழுவிச் சென்று பரிணாம வளர்ச்சி பெற்று வந்தது தீபம். அதனால் சமுதாயப் பார்வைக்கு முக்கியத்துவம் கொடுத்தது. முற்போக்குப் பார்வையும் முற்போக்குச் சிந்தனைகளும் கொண்ட, காலத்தைப் பிரதிபலிக்கும் படைப்புகளே தேவை என்று வலியுறுத்தி வந்திருக்கிறது. அத்தகைய நாவல்களும் சிறுகதைகளும் குறுநாவல்களும் வெளிவரத் துணைபுரிந்துள்ளது.

படைப்பு இலக்கியம் வளம் பெற வகை செய்ததுடன், திரைப்பட விமர்சனத்துறை, இலக்கிய விமர்சனம், புதுக்கவிதை, கடித இலக்கியம் முதலியன வளரவும் தீபம் உதவியிருக்கிறது. அயல் மொழி இலக்கியங்களின் தொடர்பையும், சர்வதேசப் பார்வையையும் வளர்த்து வந்திருக்கிறது.

காலம் கடந்து வாழும் இலக்கியங்களை - மக்கள் இலக்கியமான நாடோடிக் கதைகள், இந்திய மற்றும் பல நாடுகளின் குட்டிக் கதைகள் ஆகியவற்றை - நல்ல முறையில் - தொகுத்துப் பதிவு செய்துள்ளது.

தமிழ் இதழியல் வரலாற்று ஆய்வாளர்களுக்குப் பெரிதும் உதவக்கூடிய மணிக்கொடிக் காலம், சரஸ்வதி காலம், புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, தமிழில் சிறு பத்திரிகைகள், 'எழுத்து' அனுபவங்கள் ஆகியவற்றை தொடர்ந்து பிரசுரம் செய்ததன் மூலம் தீபம் தனிச்சிறப்பு பெற்றது.

'மணிக்கொடிக்காலம்', 'புதுக் கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' ஆகியவை சாகித்திய அகாடமி விருதினைப் பெற்று, தீபத்துக்கும், அக்கட்டுரைகளின் ஆசிரியர்களுக்கும் பெருமை தேடித்தந்துள்ளன.

இலக்கியத்தின் பல துறைகளிலும் தரமான படைப்புகளையும் புதிய சோதனை முயற்சிகளையும் வெளியிட்டு, தமிழ் பத்திரிகை உலகத்திலும், தமிழ் இலக்கிய உலகத்திலும் தனக்கென ஒரு தனி இடத்தை அடைந்துள்ளது தீபம். அதன் ஒளி மங்காது என்றும் நிலைத்து நிற்கக் கூடியது ஆகும்.

